# கவிராட்சசன்

மஸஹருடன்

கலைமகள் வெளியீடு

# கவி ராட்சசன்

*மஸ்ஹருடீன்*



உரிமை பதிவு ]

கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரு. *1/4*

# முகவுரை

கற்பனை ஜாலத்தைக் கையாளுவதில் கம்பன் ராட்சசன். வருணனைகளை விவரிப்பதில் இளங்கோ ராட்சசன். தெய்வத்தின் திருவிளையாடல்களைக் கூறுவதில் சேக்கிழார் ராட்சசன். சுதந்தர உணர்ச்சியை எழுப்பும் பாடல்களைப் பாடுவதில் பாரதி ராட்சசன். இந்த ராட்சசர்கள் கூட்டத்தில் மற்றொரு ராட்சசரும் இருக்கிறார். அவர்தாம் ஒட்டக்கூத்தர். அவர் கவிராட்சசர் மட்டுமல்ல. அவர் கவிச் சக்கரவர்த்தி; கவுடப் புலவர்; சர்வஞ்ஞ கவி.

விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் ஆகிய இச் சோழர்கள் அரசாண்ட காலத்தில் ஒட்டக்கூத்தர் ஆஸ்தான கவியாகத் திகழ்ந்தார். "ஒட்டக்கூத்தருக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்ற முதுமொழி இன்றுகூட அப்புலவரின் புகழை நினைவூட்டுகின்றதல்லவா?

உலாவும் பரணியும் பாடுவதில் ஒட்டக்கூத்தருக்கு நிகர் எவருமிலர். அமானுஷ அம்சங்களை (Supernatural elements) வருணிப்பதில் ஆங்கிலக் கவிஞர் மில்டனுக்கோ அன்றி ஜர்மன் கவிஞர் கத்தேக்கோ அவர் தாழ்ந்தவரல்ல. ஒரு படி உயர்ந்தவர்தாம்! அவர் பாடிய தக்கயாகப் பரணியை அலசிப் பாருங்கள்.

ஒட்டக்கூத்தர் பாடிய பதினொரு நூல்களில் மூன்று அழிந்துவிட்டன. மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் சோணாட்டில் தோன்றியிராவிடில் பல மடங்களில் கேட்பாரற்றுச் சிதறிக் கிடந்த மற்ற நூல்களுக்கும் அதே கதி நேர்ந்திருக்கும். அப்பெரியார் புரிந்த தொண்டு தெய்விகத் தொண்டாகும். அப்பணியில் ஈடுபட்டுத் தாம்

ஒன்று திரட்டிய நூல்களைச் செப்பனிட்டுத் தரணியோர் அநுபவிக்க வெளிக்கொண்டுவந்த அறிஞர்களுள் தலைசிறந்தவர் நம் ஐயரவர்கள்.

"ஒட்டக்கூத்தரின் நூல்கள் - சரித்திர இலக்கிய ஆராய்ச்சி" என்ற பணியில் நான் ஈடுபட ஒரு தருணம் வாய்த்தது. கருமமே கண்ணாகக் கொண்டு நான் முடித்த திருவினை பயன் பெற்றது. அக் கட்டுரை, "பவல் அண்ட் மோர்ஹட் பரிசு" - (ரூ. 242/- ) - என்ற பரிசைப் பெறும் பாக்கியமும் அடைந்தது. அக்கட்டுரைதான் சுருங்கிய உருவில் "கவி ராட்சசன்" என்ற பெயருடன் இப்புத்தக வடிவில் வந்துள்ளது.

கட்டுரையைச் சுருக்கியும் புருப் பார்த்தும் உதவிய என் நண்பர்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகும். மக்களுக்குப் பயன்படுமாறு இப்புத்தகத்தைப் பிரசுரிக்க மனமுவந்து ஏற்றுக் கொண்ட தமிழ்நாட்டுச் சிறந்த பிரசுரகர்த்தாக்களான கலைமகள் காரியாலயத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றி.

"மாசும் மன்ஜில்",
முகம்மது நகர்,
விஜயவாடா,
31-5-1952.

முகம்மது மஸஹருடீன்

## இப்புத்தகத்திற்கு ஆதாரமான நூல்கள்


1. மூவருலா .. *அ. கோபால ஐயர் பதிப்பு*

2. ,, .. *எஸ். கலியாணசுந்தரமையர் பதிப்பு*

3. தக்கயாகப் பரணி

4. குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்

5. தமிழ் நாவலர் சரிதை .. *திருக்கோணமலை த. கனக சுந்தரம் பிள்ளை*

6. செங்குந்தர் பிரபந்தத் திரட்டு .. *காஞ்சி நாகலிங்க முனிவர்*

7. தமிழ்ப் புலவர் வரலாறு 16-ஆம் நூற்றாண்டு .. *ச. சோமசுந்தர தேசிகர்*

8. சோழர்கள்-முதல் பாகம் .. *க. அ. நீலகண்ட சாஸ்திரியார்*

9. மூன்றாம் குலோத்துங்க சோழன் .. *வி. ஆர். ராமசந்திர தீக்ஷிதர்*

10. விநோதரச மஞ்சரி .. *வீராசாமி செட்டியார்*

11. தமிழ் இலக்கியமும் சரித்திரமும் .. *வி. ஆர். ராமசந்திர தீக்ஷிதர்*

12. சோழமண்டல சதகம் .. *திருவாரூர் சோமசுந்தர தேசிகர்*

13. தமிழ் வரலாறு - முதல் பாகம் .. கே. எஸ். சீனிவாச பிள்ளை

14. கவிச்சக்கரவர்த்தி ஒட் டக்கூத்தர் சரித்திரம்.. சி. சு. நாரயணசாமி முதலியார்

15. ஒட்டக்கூத்தரைப் பற்றி - "செந்தமிழ்" சஞ்சிகை .. 4, 6-ஆம் வால்யும்-2 (1903-1904) தொகுதிகள்: ஸ்ரீ ரா. இராகவையங்கார்

16. தமிழ்ப் பொழில்—வால்யும் 12—1936/37 பதிப்பு—பக்கம் 447

17. ,, ,, 5—1929/30 பதிப்பு—பக்கம் 473

18. ,, ,, 6—1930/31 பதிப்பு—பக்கம் 1

19. ,, ,, 14—1938/39 பதிப்பு—பக்கம் 51, 223, 300.

# பொருளடக்கம்

# கவி ராட்சசன்

## 1

## சோழர் பரம்பரை

நீர்வளமும் நிலவளமும் வண்மையும் மிகுந்ததும் வீரம் செறிந்ததும் மறைகள் மலிந்ததும் எம்மதத்தையும் சம்மதமாக ஏற்று நின்றதும் இறை ஒளியும் இசை ஒலியும் எண் திசைகளி லும் பரந்து விளங்குவதும் நம் பாரத நாடாகும். இது மிகத் தொன்மை வாய்ந்த நாடு. இங்நாட்டில் தோன்றிய அரசுகளுக்கு எல்லையே இல்லை; அவை மறைந்த பின் தோன்றிய மாறுதல்களுக்கும் கணக்கே இல்லை. இம் மாறுதல்களினால் வடநாடு பாழடைந்தபோது, நம் தென்னாடு பாரதத்தாயின் திலகம்போல் எவ்விதக் குறையுமின்றி ஆரணங்களும் ஆகமங்களும் எங்கும் ஒலிக்கத் திகழ்ந்து வந்தது. இது சரித்திரக் கூற்றாகும்.

வடக்கில் வேங்கடத்தையும் தெற்கில் குமரியையும் மேற்கிலும் கிழக்கிலும் கடல்களையும் எல்லையாகக் கொண்டு விளங்கியது தமிழகம். இத்தமிழகத்தில் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூவேந்தர் சேரநாடு, சோணாடு, பாண்டியநாடு என்ற நாடுகளை முறையே ஆண்டுவந்தார்கள். இவைகளைக் குடபுலம், குணபுலம், தென்புலம் என்றும் கூறுவர். பண்டை நூல்களான இராமாயணம், பாரதம், சில பௌத்த நூல்கள் முதலியன இந்நாடுகளை வருணித்திருப்பதால் இவற்றின் தொன்மை நன்கு விளங்கும்.

சோழர்கள் வீரம் செறிந்தவர்கள்; தீரர்கள்; சீலர்கள்; செங்கோல் ஒச்சுவதில் இணையில்லாதவர்கள். இச்சோழர்களைச் சங்க காலத்திற்கு முற்பட்ட சோழர்கள், சங்க காலத்துச் சோழர்கள், பிற்காலத்துச் சோழர்கள் என்று மூன்று வகையாகப் பிரித்துக் கொள்ளலாம்.

சங்க காலத்துக்கு முன் அரசுபுரிந்த சோழர்களை மூவருலா, கலிங்கத்துப்பரணி என்னும் நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. மனு, மாந்தாதா, சிபி, முசுகுந்தன் ஆகிய இவர்கள் இக்காலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் ஆதவன் மரபைச் சேர்ந்தவர்கள்.

சங்க காலத்தில் அரசுபுரிந்த சோழர்களைப்பற்றிச் சங்கநூல்களும் பிரபந்தங்களும் ஆகமங்களுங் கூறுகின்றன. கரிகாற்சோழனும் கோச்செங்கணனும் கிள்ளிவளவனும் இக்காலத்தைச் சேர்ந்தவர்கள். பட்டினப்பாலையும் பொருநராற்றுப்படையும் கரிகாலனின் அரிய செயல்களைக் கூறுகின்றன. கிள்ளிவளவனையும் பெருநற்கிள்ளியையும் மணிமேகலையும் சிலப்பதிகாரமும் வருணிக்கின்றன. கோச்செங்கணனைத் தேவாரமும் களவழி நாற்பதும் விரிவாகப் புகழ்கின்றன.

பிற்காலத்துச் சோழர்கள் தாம் உண்மையிலே தங்கள் வெற்றிகளாலும் பெருந்தன்மையினாலும் சோணாட்டை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவந்தார்கள் என்று கூறவேண்டும். சில காலம் பல இன்னல்கள் மிகுந்திருந்தபோதினும் திடமனத்துடன் வீரப்போர் பல புரிந்து புலிக்கொடியின் நிழலைத் தமிழகம் மட்டுமன்றிக் கடல் கடந்த நாடுகளிலும் பரவச் செய்த புகழ் இவர்களைத்தான் சேரும் என்பதில் ஐயமில்லை.

கோச்செங்கணனுக்குப் பிறகு சோழர்கள் பலம் குன்றியிருந்தார்கள். இதற்குக் காரணம் வட நாட்டாரும் பல்லவர்களும் ஆதிக்கம் பெற்றதுதான். எட்டாம் நூற்றாண்டில் சாளுக்கியர்களும் பாண்டியர்

களும் பல்லவர்களைத் தோற்கடித்தனர். இத்தரு ணத்தை நழுவ விடாது விஜயாலயன் என்ற சோழமன்னன் பல்லவர்களை வேரோடு முறியடித்துச் சோழ அரசை மறுமுறை நிலைபெறச் செய்தான். அவன் சோணுட்டின் எல்லையை விரிவுபடுத்திக் கொங்கு நாட்டின் ஒரு பகுதியையும் கைப்பற்றினன். பிறகு ஆதித்தன் என்பவன் பாண்டியர்களின் துணை பெற்று இழந்த சோணுடு முழுவதையும் அடைந்ததல்லாமல் தொண்டைநாட்டையும் கைப்பற்றினன். அவன் மைந்தன் பரகேசரி பராந்தகன் ஈழநாட்டையும் பாண்டிய நாட்டையும் கீழ்ப்படியச் செய்தான். அதன் பின் இராசராசன் சேரநாடு, பாண்டியநாடு, ஈழநாடு இவைகளைச் சோணுட்டின் பிரிவுகளாகச் செய்து சோழ சாம்ராச்சியத்தை ஏற்படுத்தினன். அவன் மகன் இராசேந்திரன் பூர்வதேசம், கங்கைநாடு, கடாரம், மலைநாடு, இரட்டபாடி, ஒட்டரம், கோசலம், வங்காளம் முதலிய நாடுகளை வென்று அடிமைப்படுத் தினன். அவன்காலத்தில் சோணுடு மிகவும் பலம் பொருந்தியிருந்ததால் அதனை எதிர்க்கத் தக்க வேறு நாடுகள் இல்லை. அவனுக்குப் பின் வந்த சோழர் கள் மிக்க சிறப்புடன் ஆண்டனர். அதிராசேந்திரன் காலத்தில் ஏற்பட்ட மக்கட்புரட்சியை அடக்கிச் சிம்மா சனமேறினன் முதற் குலோத்துங்கன். வடநாட்டில் வேங்கை மண்டலமும் தென்னுட்டுச் சோழ மண்டல மும் தவிர, தொண்டைமண்டலமும் இவனுக்குக் குல வுரிமையால் கிடைத்தமையால் சோணுடு மிகவும் பரந்து செழிப்புடனும் புகழுடனும் திகழ்ந்தது. முதற் குலோத்துங்கன் மகன் விக்கிரமசோழன் கி. பி. 1117-இல் அரியணையேறினன். இவனுக்குப் பிறகு இரண்டாம் குலோத்துங்கனும் பிறகு இரண்டாம் இராச ராசனும் அரசுபுரிந்தார்கள். இவர்களைப்பற்றிப் பின்னல் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

# 2

# இலக்கிய யுகம்

சோழர்காலத்தில் அரசாட்சி எப்படிப் புகழுடன் விளங்கியதோ அப்படியே இலக்கியமும் மிகுந்த சிறப்புடன் உயர்ந்த நிலையை வகித்துவந்தது. அக்காலத்தை இலக்கிய யுகம் என்றே கூறவேண்டும். இதற்குப் பல காரணங்கள் உண்டு. சோழர்கள் மிக்க வலிமை உடையவர்களாக இருந்ததால் நாட்டில் அமைதியும் மகிழ்ச்சியும் இரக்கமும் பெருந்தன்மையும் எங்கும் காட்சியளித்தன. செல்வத்தில் திகழ்ந்த கடல் கடந்த நாடுகளை அடிமைப்படுத்தியதால் அந்நாடுகளின் செல்வம் சோணாட்டில் குவிய ஆரம்பித்தது. பல ஆண்டுகளில் பெற்ற பெரும் வெற்றிகளின் காரணமாகச் சோழர்களின் ஏகாதிபத்தியம் எங்கும் பரவியிருந்தது. சோழர்கள் கலைத்துறைகளை வளர்ப்பதிலும் பெரும் புலவர்களை இன்புறச் செய்து போற்றுவதிலும் திருப்பணிகளைச் செய்வதிலும் காலத்தைக் கழித்தார்கள். இச்செய்தியை,

> "கலையினொடுங் கவிவாணர் கவியினொடும்
> இசையினொடுங் காதலின்ப
> நிலையினொடு மனுநீதி நெறியினொடும்
> மறையினொடும் பொழுதுபோக்கி"
>
> (கலிங்கத்துப் பரணி: 264)

என்ற தாழிசையால் அறியலாகும்.

சோழர்கள் மிகவும் தாராள மனத்துடன் பெருஞ் செல்வத்தை நாட்டின் நலன்களுக்காக வாரி இறைத்தார்கள். கோவில்களும் மடங்களும் மாளிகைகளும் கட்டுவித்தார்கள். மிகவும் பக்திமான்களாக

இருந்தமையால் பல திருப்பணிகள் செய்ததோடு நில்லாமல் பல புலவர்களைக் கொண்டு ஆகமங்களை யும் பிரபந்தங்களையும் பக்திரசப் பாடல்களையும் இயற்றுவித்தும், வடமொழியிலுள்ள காவியங்களைத் தமிழாக்கியும் கலைத்தொடர்பான பல அரிய தொண்டுகளைப் புரிந்தார்கள். இராசராசன் காலத் தில் கருவூர்த்தேவர் என்ற புலவர் திருவிசைப்பா என்ற நூலை இயற்றினார். நம்பியாண்டார்நம்பி மறைந்துபோன தேவாரங்களைத் தேடித் தொகுத்தார். வீர இராசேந்திரன் காலத்தில் புத்தமித்திரர் என்ற புலவர், 'வீர சோழியம்' என்ற இலக்கண நூலை இயற்றி அவன் பெயரால் வெளியிட்டார். முதற் குலோத்துங்கன் காலத்தில் சயங்கொண்டார் என்ற கவிஞர், 'கலிங்கத்துப் பரணி' என்ற நூலை அருளினா. இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் சேக்கிழார், 'திருத்தொண்டர் புராணம்' இயற்றினார்; ஒட்டக் கூத்தர், புகழேந்தி, தத்துவப்பிரகாசர், வாலகோகிலம் என்ற புலவர்களும் திகழ்ந்தனர். மெய்க்கீர்த்தி என்ற புகழ்ச்சிப் பாடல்கள் சாஸனங்களில் பொறிக்கப் பட்டன. சோழர்கள் காலத்தில் விளங்கிய புலவர்கள் சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல் கவிதைகளை இயற்றி மன்னர்களிடம் விருதுகளைப் பெற்றார் கள். காவியங்கள் சிலவாக இருப்பினும் தெய்விகம் பொருந்தியவையாக விளங்கின. இவ்விலக்கிய சகாப் தத்தில், 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டத்துடன் ஒரு புலவர் வாழ்ந்துவந்தார். அவர் ஓர் அரசன் காலத்தில் மட்டும் வாழ்ந்தவரல்லர்; ஓர் அரசனால் மட்டும் விருது களைப் பெற்றவருமல்லர். மூன்று சோழ மன்னர் களிடம் ஆஸ்தானப் புலவராக விளங்கியவர். இவரே ஒட்டக்கூத்தர் என்பவர். இவரைப்பற்றி இனி விரி வாகக் கூறுவோம்.

# 3

# ஒட்டக்கூத்தர்

ஒட்டக்கூத்தர் வாழ்ந்த காலத்தைப் பழந்தமிழ் நூல்களைக் கொண்டே ஆராயவேண்டும். சங்கரசோழனுலா,

"செம்பதத்துக் கூடிய 'சீர்தந்த' வென்றெடுத்த
கூத்தனுலாச் சூடிய விக்கிரம சோழனும்—பாடிய
வெள்ளைக் கலியுலா மாலையோடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றேனும்—தெள்ளித்தம்
முன்னு யகரினவன் முதுலாக் கண்ணிதோறும்
பொன்னு யிரஞ்சொரிந்த பூபதியும்.."

என்று சங்கரசோழனுலாக் கூறுகின்றது. இதனால் இப்புலவர் பெருமான் விக்கிரமசோழன் காலம் முதல் மூன்று மன்னர் ஆட்சி புரிந்த காலத்தவர் என்பது போதரும்.

## பிறந்த ஊர்

கூத்தர் சோணாட்டிலுள்ள திருவாய்மூர்ப் பக்கத்திலுள்ள மணக்குடியில் பிறந்தவர். அவர் பெரும்பாலும் வசித்து வந்த ஊர் கூத்தனூராகும். இவ்வூர் சோழனால் இவருக்குத் தானமாக அளிக்கப்பட்டது என்று தெரிகிறது. இன்றைக்கும் கூத்தரால் கட்டப்பட்ட சரஸ்வதி ஆலயம் அங்கே உள்ளது. கூத்தர் மலரி என்ற ஊரில் பிறந்தார் என்னும் தண்டியலங்காரம்.

"—ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கோன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு"

என்ற தண்டியலங்கார மேற்கோட் செய்யுளின் அடிகளால் இது விளங்குகின்றது. இவ்வடிகளைக் கொண்ட

பாடல் தமிழ்நாவலர் சரிதையிலும் (பக்கம் 49) காணப்படுகின்றது. ஆனால்,

"ஒத்த துணர்ந்த நாடனைத்தும் ஒருங்கே கூடி யுயர்கூத்தன்
கத்தி யலையத் துரத்தலுங் கசிந்து காழிக் கவுணியர்கோன்
பத்தி யுடனே தக்கன்மகப் பரணி பாடப் பணிந்துமுத்தின்
வைத்த சிவிகை மகிழ்ந்தேற வைத்தார் சோழ மண்டலமே"

என்று பிற்காலத்தில் எழுந்த சோழமண்டல சதகம் கூறுவதை ஆதாரமாகக்கொண்டு கூத்தர் சீர்காழியில் பிறந்ததாகக் கூறுவர் சிலர். கூத்தரைப் போற்றித் திருவிழாக்கள் சீர்காழியில் நடைபெறுகின்றன. கூத்தர் எழுதிய நூல்களின் ஏட்டுச்சுவடிகள் சீர்காழியிலுள்ள மடங்களிலேயே முதல் முதலாகக் கண்டெடுக்கப் பட்டன என்றும் கூறுவர். ஆனால் இவ்விஷயங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு கூத்தர் சீர்காழியில் பிறந்ததாக முடிவு செய்வது ஏற்றதல்ல.

## பெற்றோரும் மரபும்

கூத்தரின் தந்தையின் பெயர் சிவசங்கரபூபதி; அன்னையின் பெயர் வண்டமர் பூங்குழலி.

(செங்குந்தர் பிரபந்தத் திரட்டு).

இவர் செங்குந்தர் மரபில் பிறந்தவர். தம் மரபினரைப் புகழ்ந்து, 'ஈட்டியெழுபது' என்ற நூலை இயற்றியுள்ளார். இவர் சைவத்தில் பற்றுள்ளவர். கலைமகளிடம் மிக்க பக்திகொண்டவர். 'ஆற்றங் கரைச் சொற்கிழத்தி வாழியே' என்று இவர் கூறியது இதற்குச் சான்றாகும்.

## பெயர்க் காரணம்

மரபின் காரணமாக இவர் கூத்தமுதலியார் என்று அழைக்கப்பட்டார். பந்தயம் வைத்துப் பாடுவதில் பெயர்பெற்றவராதலால், 'ஒட்டக்கூத்தர்' என்று

அழைக்கப்பட்டாராம். (ஒட்டம் - பந்தயம்). இரு வேறு பாக்கள் தம்முள் ஒட்டப்பாடினமையால், 'ஒட்டக் கூத்தர்' என்ற பெயரைப் பெற்றார் என்றும் கூறுவர். விக்கிரம சோழன் தன்மீது இயற்றப்பட்ட உலாவில் ஒரு கண்ணியை ஒட்டிப் பாடும்படி விரும்ப அவ்வாறே விரைந்து பாடினதால் இவர் ஒட்டக்கூத்தர் என்று பெயர்பெற்றார் எனத் தெரிகின்றது. இவருக்கு இப்பெயர் வருவதற்கு மற்றொரு காரணம் செங்குந்தர் கூறுவர்: செங்குந்த மரபினர் ஒரு நாள் கூத்தரிடம் வந்து தங்கள் மரபின்மீது ஒரு பிரபந்தம் பாடும்படி கேட்க அதற்குக் கூத்தர் முதலில் மறுத்த போதிலும் பிறகு சம்மதித்து ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு தலை விழுக்காடு எழுபது, தலைச்சன் பிள்ளைகளின் சிரங்களை விருதாகக் கொடுக்கும்படி கட்டளையிட அவர்கள் அவ்வாறே செய்தனராம். கூத்தர் அச்சிரங்களைச் செவ்வையாக அடுக்கி அத்தலையாசனத்தின்மீது வீற்றிருந்து,

"கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் வாழ்வதுவு நீசமேயன்றே!
சிலைவாண னுவிருந்தா யிரம்புயங்கள் துணிந்துமுயல்
சீவனுற்றன்
தலையாவி கோடுத்திடுஞ்செங் குந்தருயிர் பெற்றிட நீ
தயைசெய்வாயே"

என்று கலைமகளை வேண்ட அத்தலைகள் தத்தம் உடல்களில் ஒட்டிக்கொண்டன. இறந்தவர் உயிர் பெற்றனராம்! 'அற்ற தலையும் உடலும் ஒட்டப்' பாடிய காரணத்தினால் ஒட்டக்கூத்தர் என்ற பெயர் பெற்றாராம். (விநோதரசமஞ்சரி: பக்கம் 238 - 239).

## வாழ்க்கை

கூத்தர் தமது இளமைப்பருவத்தில் புதுவைச் சங்கரன் என்ற பிரபுவுக்கு உதவித் தொழில் புரிந்துவந்

தார். பிறகு காங்கேயர் என்ற தனவந்தர் இவர் அறிவை மெச்சிப் போற்றிவந்தார். இதற்கு நன்றியாகக் கூத்தர் 'நாலாயிரக் கோவை' என்ற பிரபந்தத்தை அவர்மீது பாடினார். பிறகு விக்கிரமசோழனிடம் ஆஸ்தானக் கவிஞராகவும் இரண்டாம் குலோத்துங்கனிடம் வித்தியாகுருவாகவும் இரண்டாம் இராசராசனிடம் ஆஸ்தானப் புலவராகவும் விளங்கினார். இக்காலத்தில் இம்மூன்று சோழர்கள்மீது மூன்று உலாக்களையும் இரண்டாம் குலோத்துங்கன்மீது ஒரு பிள்ளைத்தமிழை யும் விக்கிரமன்மீது ஒரு பரணியையும் இயற்றினார். இதனைச் சங்கரசோழன் உலாக் கூறுகிறது. பெருமான்நம்பி என்பாரும் காவிரிப்பூம்பட்டினத்து உபகாரிகளில் சிலரும் இவரை ஆதரித்துவந்தனர்.

## பட்டங்கள்

இவர் அக்காலத்துக் கவிகளில் மிகச் சிறந்தவரா தலால், 'கவிச்சக்கரவர்த்தி' என்ற பட்டத்தைப் பெற்றார். இச்செய்தி:

"ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே
ஆற்றங் கரைச்சோற் கிழத்தி வாழியே
கோக்குந் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே
கூத்தன் கவிச்சக் கரவர்த்தி வாழியே"

(தக்க: 813),

"பாடற் பெரும்பரணி தேடற் கருங்கவி
கவிச்சக்கர வர்த்தி பாவ.."

(குலோ. பிள்ளைத்: 14)

என்ற பாடல்களால் தெரியவருகிறது.

இவர் அரசனால் 'காளம்' என்ற விருது பெற்றமையால் **'காளக் கவி'** என்ற பட்டம் பெற்றார் என்பது,

"கோத்தற்குஞ் சடிலக்குந் தளநக்த மல்லாற்
கூழைத்தண் டமிழக்கேன் கொடியுங்கா ளமுமே"

என்னும் தமிழ்நாவலர் சரிதைச் செய்யுளால் தெரிகிறது. வடமொழி, தென்மொழி ஆகிய இவ்விரு மொழிகளிலும் புலமைத்திறம் பெற்றிருந்தால் இவர் 'சர்வஞ்ஞகவி' என்ற பட்டமும் பெற்றார். இவருக்குக் 'கவிராக்ஷதன்' என்ற பட்டமும், 'கவுடப் புலவன்' என்ற பட்டமும் உண்டு என்பதைச் சோழமண்டல சதகம் கூறுகின்றது:

''புதுவைச் சடையன் பொருந்து சங்கரனுக்
குதவித் தொழில்புரி யொட்டக் கூத்தனை
கவிக்களி றுகைக்கும் கவிரா க்ஷதனெனப்
புவிக்குயர் கவுடப் புலவனு மாக்கி''

(சோழமண்டல சதகம்: 93).

தவிர இவர் ஆசிரியர், பிரதிபிதா என்ற பட்டங்களைப் பெற்றார் என்று செங்குந்தர் பிரபந்தங்கள் கூறுகின்றன.

## இவர் காலத்துப் புலவர்கள்

**கூ**த்தர் காலத்தில் பல சிறந்த புலவர்கள் வாழ்ந்தனர். நம்பிகாளியார், திருப்புகலூர் அந்தாதி பாடிய நெற்குன்றவாணமுதலியார், தத்துவப்பிரகாசர் ஆகிய புலவர்கள் கூத்தர் காலத்தைச் சார்ந்தவர்கள். கிருஷ்ணதேவராயரிடம் ஒட்டக்கூத்தர் வந்தபோது அவருடைய கவிகளைக் கேட்டு இராயர் மெச்ச, தத்துவப்பிரகாசர் கூத்தரை இழிவாகப் பேசி,

''பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் பாரோர்
முறியாரோ நின்முதுகின் முள்ளைச் சிறுகவோரு
மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானக்கால்
ஒட்டக்கூத் தன்றா னுனக்கு''

என்ற பாடலைப் பாடினாராம். இங்ஙனம் பதினாறும் நூற்றாண்டுப் புலவர்கள் என்ற நூல் கூறும். இங்கே குறிக்கப்பட்ட கூத்தர் வேறொரு கூத்தராக இருத்தல்

வேண்டும். 'காக்கண்ட செங்கைக் கவிச்சக்கர வர்த்தி நின் கட்டுரையாம்' என்று நெற்குன்றவாண முதலியார் கூறியதாகத் •• தமிழ்நாவலர்சரிதை கூறுகின்றது. 'ஒட்டக்கூத்தர் உலாப் பாடியபோது பேராசிரியர், நேமிநாதர் பாட்டோலை பிடிக்கப் பாடியது' என்ற தலைப்பின்கீழ் ஒரு செய்யுள் தமிழ்நாவலர்சரிதையில் (பக்கம் - 46) உள்ளது. இப்பாட்டினால் அவர் காலத்தில் பேராசிரியர், நேமிநாதர் என்ற புலவர்கள் இருந்ததாகத் தெரிகின்றது. கம்பரும் புகழேந்திப் புலவரும் இவர் காலத்தில் வாழ்ந்ததாக விநோதரச மஞ்சரி கூறும். ஆனால் இதனை ஏற்றுக்கொள்ளப் போதிய சான்றுகள் இல்லை.

# 4

# கூத்தர் இயற்றிய நூல்கள்

ஒட்டக்கூத்தர் வரகவி. இளம்பிராயத்திலேயே இவருக்குக் கவிதை பாடும் ஆற்றல் இருந்ததாகத் தெரிகிறது. 'சரஸ்வதி தம்பலங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்த முதலியார்' என்று தமிழ்நாவலர் சரிதையில் காணப்படுவதால் இவர் கலைமகளின் அருளைப் பெற்றவரெனத் தெரிகிறது. 'அரும்பைத் தொள்ளாயிரம் பாடும்போது விக்கிரம சோழன் கேட்டு ஒரு கவியை ஒட்டச் சொல்லென்று சொன்னபோது பாடியது' என்ற தலைப்பின் கீழ்த் தமிழ்நாவலர்சரிதையில் :

"நடித்தது நச்சுர வுச்சியி லுச்சி மதிவிலங்கைப்
பிடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்சேண்டால்
அடித்தது பொற்கிரி விக்கிரம சோழ வகளங்கனே"

என்ற செய்யுள் உள்ளது. இதன் தலைக்குறிப்பை நோக்கின் விக்கிரம சோழன் காலத்தில்தான் கூத்தர் வரகவியானாரென்பது புலப்படும்.

நாவுக்கு நயமும் செவிக்கு இன்பமும் மனத்துக்கு மகிழ்ச்சியும் அறிவுக்கு வளமும் பொழுதுபோக்குக்கு உல்லாசமும் தரத்தக்க இனிய செந்தமிழ் நடையில் செய்யுட்களை இவர் இயற்றியுள்ளார்; தமிழ் இலக்கண இலக்கியங்களில் மிகுந்த பயிற்சி பெற்றிருக்கிறார். வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளையும் நன்றாக ஆய்ந்து ஓய்ந்து அறிந்துள்ளார்.

ஒட்டக்கூத்தர் பாடிய நூல்கள் பதினொன்று என்று கூறுவர். இந்நூல்கள் எல்லாம் இக்காலத்

தில் கிடைத்தில. கிடைத்தவைகளிற் சில செல்லரித்து அழிந்த நிலைமையில் இருந்தன. செங்குந்த மரபினர் ஈட்டியெழுபது, எழுப்பெழுபது ஆகிய நூல்களை மிக்க ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்துள்ளார்கள். மற்றும் பல பூர்த்தியான கையெழுத்துப் பிரதிகள் தருமபுர ஆதீனம், காஞ்சிமடம், சீர்காழி ஆகிய இடங்களில் கிடைத்தன. நூல்களின் உரைகளும் மிகவும் அழிந்த நிலைமையில் கிடைத்தன. ஆனால் தமிழன்பர்கள் அவைகளை உயிரைப்போல் காப்பாற்றி வந்தார்கள், மற்றும் பலர் அவைகளை ஆராய்ச்சி செய்து பிழைகளைத் திருத்தியும் அடிகள் அழிந்த இடங்களைப் பூர்த்தி செய்தும் வெளியிட்டார்கள்.

## கூத்தர் பாடிய நூல்களாவன:

1. சரசுவதியந்தாதி
2. காங்கேயன் நாலாயிரக் கோவை
3. அரும்பைத் தொள்ளாயிரம்
4. விக்கிரமசோழன் உலா
5. குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ்
6. குலோத்துங்கசோழன் உலா
7. இராசராசசோழன் உலா
8. தக்கயாகப்பரணி
9. ஈட்டியெழுபது
10. எழுப்பெழுபது
11. எதிர்நூல்

கூத்தருக்குச் சரசுவதி தனது திருமுலைப்பாலைப் பொன்வட்டிலிற் சுரந்து உண்பித்துச் 'சகலகலா நிலயம்' என்ற ஒரு தெய்விக நூலைக் கொடுத்து மறைந்தாள் என்று ஒரு சரித்திரம் கூறுகின்றது. அப்பொழுதுதான், 'சரசுவதியந்தாதி' என்ற நூலைக்

கூத்தர் இயற்றியதாகத் தெரிகிறது. ஆனால் சிலர் கூத்தர் முதல்முதலில், 'நாலாயிரக் கோவையை'யே பாடினார் என்று கூறுவர். மற்றும் சிலர் 'அரும்பைத் தொள்ளாயிரமே' முதல் நூல் என்பர்.

கூத்தர் இயற்றிய மற்றொரு நூல், 'அரும்பைத் தொள்ளாயிரம்'. இது முத்தொள்ளாயிரம், வச்சத் தொள்ளாயிரம், சயங்கொண்டார் பாடிய இசையாயிரம் ஆகிய இவைகளைப்போன்ற நூல். இலக்கண விளக்கப் பாட்டியல் சூத்திரவுரையில் காணப்படும், 'அரும்பைத்தொள்ளாயிரம்' இதுவே போலும். 'சரஸ்வதி தம்பலங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்த முதலியார் அரும்பைத்தொள்ளாயிரம் பாடியபோது, விக்கிரமசோழன் கேட்டு ஒரு கவியை ஒட்டச் சொல்லென்று சொன்னபோது பாடியது' என்ற தலைப்புடன் ஒரு செய்யுள் தமிழ்நாவலர் சரிதையில் உள்ளது. ஆகையால் இந்நூல் விக்கிரமசோழன் காலத்தில் பாடப்பெற்றது எனத் தெரிகிறது.

கூத்தரின் இளம்பிராயத்தில் காங்கேயர் என்ற தனவந்தர் இவரை ஆதரித்தார். கூத்தருக்கு அறிவு புகட்டி, கவுடப் புலவர் என்ற பட்டத்தை அடையும்படி செய்தவர் இவரே. நன்றியாகக் கூத்தர், 'நாலாயிரக் கோவை' என்ற நூலை அவர்மீது பாடினாரென்று சோழ மண்டல சதகம் கூறுகின்றது. *

முன் கூறப்பட்ட சரசுவதியந்தாதி, காங்கேயன் நாலாயிரக் கோவை, அரும்பைத்தொள்ளாயிரம் இவை கிடைத்தில. எதிர்நூலும் கிடைக்கவில்லை.

விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்க சோழன், இரண்டாம் இராசராச சோழன் இவர்கள் மீது கூத்தர் உலாக்கள் பாடியுள்ளார்.

---

* 10-ஆம் பக்கம் பார்க்க.

# 5

# உலாப் பிரபந்தங்கள்

உலா என்பது தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்றாகும். உலாவென்றால் பவனி என்று பொருள்படும். பாட்டுடைத் தலைவன் உலா வருதலைச் சிறப்பித்துக் கூறுதலால் உலா என்ற பெயர் உண்டாயிற்று.

> "பேதை முதலா எழுவகை மகளிர்கண்
> தோடங்கிய வகைநிலைக் தூரியான் ஒருவனைக்
> காதல்செய் தலின்வருங் கலிவெண் பாட்டே"

என்ற செய்யுளினால் இதன் பொருள் விளங்கும். உலா கலிவெண்பாவால் இயற்றப்படும். பழைய நூல்களில் தலைவன் உலா வரும் சம்பவத்தை அழகாகவும் சுருக்கமாகவும் கூறப்பட்டிருப்பதை அறிகிறோம். கம்பராமாயணம், சீவக சிந்தாமணி முதலிய நூல்களில் இவை விரிவாக வருணிக்கப்பட்டுள்ளன. தலைவன் உலா வருவதாகக் காப்பியங்களில் சுருக்கமாக அமைக்கப் படும் செய்தியைத் தமக்குரிய பொருளாகக் கொண்டு விரிவுபெற அமைந்த பிரபந்தந்தான் உலா எனப்படும்.

ஒட்டக்கூத்தரின் மூவருலா, விக்கிரம சோழன் மீதும் அவன் மகன் இரண்டாம் குலோத்துங்க சோழன் மீதும் அவன் மகன் இரண்டாம் இராசராசன் மீதும் பாடப்பட்டுள்ளது. விக்கிரம சோழனுலா 342 கண்ணிகளையும் குலோத்துங்க சோழனுலா 387 கண்ணிகளையும் இராசராச சோழனுலா 391 கண்ணி களையும் உடையன. ஒவ்வோர் உலாவின் இறுதியிலும் ஒரு வெண்பா அமைந்துள்ளது. குலோத்துங்கசோழன்

உலாவின் இறுதியில் மட்டும் ஒரு கட்டளைக்கலித் துறை சேர்க்கப்பட்டிருக்கின்றது.

விக்கிரமசோழனுலாவின் இறுதியில் காணப்படும் வெண்பா:

**"கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயும்**
**செய்ய கரிய திருமாலே—வையம்**
**அளந்தா யகளங்கா ஆலிலைமேற் பள்ளி**
**வளர்ந்தாய் தளர்ந்தாளிம் மான்."**

இவ்வெண்பாவின் முதலிரண்டடிகள் தமிழ்நாவலர் சரிதையில், 'விக்கிரம சோழனுலாப் பாடிய காலத்தில் இரண்டு கண்ணியை ஒரு பாட்டாகப் பாடென்றபோது பாடியது' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படுகின்றன. (தமிழ் நாவலர் சரிதை - 120).

குலோத்துங்கசோழனுலாவின் இறுதியில் காணப்படும் வெண்பா:

**"என்றினி மீள்வ தரிதி னிரணியனை**
**அன்றிரு கூறு யடர்த்தருளிக்—கன்றுடனே**
**ஆவின்பின் போன வனக னனபாயன்**
**மாவின்பின் போன மனம்."**

அதே உலாவின் இறுதியில் காணப்படும் கட்டளைக் கலித்துறை:

**"ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்**
**நீடுங் குடையிற் றரித்த பிரானென்பர் நித்தநித்தம்**
**பாடுங் கவிப்பெரு மாளொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்**
**சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெமைச்**
**சொல்லுவரே."**

இவ்வடிகள் தமிழ் நாவலர் சரிதையில் 'ஒட்டக்கூத்தன் பாதி சோழன் பாதி பாடியது' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படுகின்றன.

இராசராசசோழன் உலாவின் இறுதியில் காணப்படும் வெண்பா:

"அன்று தொழுத அரிவை துளவணிவ
தென்று துயில்பெறுவ தெக்காலம்—தென்றிசையில்
நீரதிரா வண்ணம் நெடுஞ்சிலையை நாணேறிந்த
வீரதரா வீரோ தயா."

இவ்வுலாக்களின் முற்பகுதியில் தலைவனின் வீரத்தையும் வெற்றியையும் முன்னோர்களின் பெருமையையும் தலைவன் நீராடல், ஊர்திகளுக்குச் செல்லுதல், உடன்செல்லுவோர், மகளிர் கூட்டம், அவர்களின் காமுறுதல் முதலியவற்றையும் கூறுகிறார் புலவர். பிற்பகுதியில் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் ஆகிய ஏழு பருவத்து மாதர்களை வருணித்து அவர்களுக்கு ஏற்பட்ட காமவுணர்ச்சியை விவரிக்கிறார்.

வேறு சில செய்திகளையும் வருணித்திருக்கிறார் கூத்தர். விக்கிரமசோழன் உலாவில் மன்னன் அலங்காரம் செய்துகொள்ளுதல், பட்டத்து அயிராபதம், குழாங்களின் கூற்று, கனக் கூறுதல், மங்கை தன்னையே ஐயுறுதல், பந்தாடுதல், தசாங்கம் ஆகிய இவைகளை விரிவாக வருணித்துள்ளார். குலோத்துங்கசோழன் உலாவில் சோழன் தில்லையில் செய்த திருப்பணிகள் வரையப்பட்டிருக்கின்றன. இராசராசசோழன் உலாவில் யானையின் பெருமை, நீர் விளையாட்டு, அரிவையின் முறையீடு இவை விசேடமாகக் கூறப்பட்டுள்ளன. காமவுணர்ச்சிகளை மிகவும் நயம்படக் கூறியுள்ளார் கவி.

குலோத்துங்கசோழன் உலாவுக்கு மட்டும் பழைய உரை இருக்கிறது. அது பதவுரையும் விசேட உரையுமாக உள்ளது. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அவர் தமது உரையில் தொல்காப்பியம், பரிபாடல், பெருங்கதை முதலிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டியுள்ளார். அவர் வடமொழி தென்மொழிப் பாண்டித்தியம் பெற்றவரென்பதை அவர் உரையால் அறியலாம்.

# ௬

# மூவேந்தர்

## விக்கிரம சோழன்

முதற்குலோத்துங்கன் மைந்தன் விக்கிரம சோழன். இவன் ஆண்டது கி. பி. 1117 முதல் கி. பி. 1134 வரை. கூத்தர் அவனிடத்தில் ஆஸ்தான கவிஞராக இருந்தார்; அவன்மீது உலாப் பாடித் தமது வறுமையைப் போக்கிக்கொண்டார் என்று தெரிகிறது. விக்கிரமனும் கூத்தருக்குப் பல விருதுகள் அளித்து ஊக்கம் அளித்து வந்தான். 'சோழன் வரிசை விடுத்தபோது கூத்தமுதலி கூறிய வகுப்பு' என்ற தலைப்பின்கீழ் விக்கிரமன் கொடுத்த விருதுகள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளன:

**"படுக்கக் கம்பளம் பரக்கக் குந்தமம்**
**பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்**
**கடுக்கக் குண்டலங் கலிக்கச் சங்கினங்**
**கவிக்குப் பஞ்சரங் கவிக்கத் தோங்கலே."**

(தமிழ்நாவலர் சரிதை: பக்கம் 43).

உலா மூன்றனுள் முதல் உலாவின் தலைவன் விக்கிரமசோழன். இவன் அன்னையின் பெயர் மதுராந்தகி. இவனுக்கு முக்கோக்கிழான், தியாக பதாகை என்ற இரு மனைவியர் உண்டு. இவனுக்கு நேரியன் மாதேவியார் என்ற மூன்றும் மனைவியும் இருந்தாள் என்று திருவிடைமருதூர்ச் சாஸனம் கூறுகிறது.

கூத்தர் தமது உலாவில் விக்கிரமனைப் பலவாறு புகழ்ந்து பாடுகிறார்: 'மாப் புகாருக்கும் வஞ்சிக்கும்

காஞ்சிக்கும் கூடற்கும் கோழிக்கும் கோமானே' என்றும், 'திகிரிதனை யுருட்டி யோரேழு பாரும் புரக்கும் பகலவனே' என்றும், 'எட்டுத் திசைகவிழ்த்த வேத்துக் குலகிரியின் மேருவே' என்றும், 'ஏனைக் கலிங்கங்கள் ஏழனையும் போய்க்கொண்ட தானைத் தியாக சமுத்திரமே' என்றும் வாயாரப் புகழ்கிறார். (328 - 331.)

## வீரச் செயல்கள்

**வி**க்கிரமன் வீரமுரசு, நியாய முரசு, தியாக முரசு மூன்றும் முழங்கச் செய்து தமிழ்நாட்டின், 'மும்மைப் புவனம்' தன் கீழ்ப்படுத்தி, செங்கோலின் நிழலை எண் திசைகளிலும் பரப்பி, எட்டுத் திசைகளிலுள்ள 'கடவுட் களிறு'களை அடக்கிப் பகைவர்கள் சூடும் மலரையும் அடையாளப் பூவையும் நீக்கி, அவர்கள் இவனுக்குத் 'துணைத்தாள் அபிடேகம்' செய்ய அரசுபுரிந்தான். நிலமடந்தை தோள்களில் வீற்றிருப்பதாலும் அவன் தேவி முக்கோக்கிழான் மருங்கில் இருப்பதாலும் சோழனின் புகழ் எங்கும் பரவிற்று. தென்கலிங்க நாட்டின்மீது இவன் படையெடுத்துத் தெலுங்கு வீமனைத் தோற்கடித்த வீரச்செயலை மெய்க்கீர்த்திகள் பின்வருமாறு கூறுகின்றன :

"தெலுங்க வீமன் விலங்கன்மிசை யேறவும்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளி."

(மெய்க்கீர்த்திகள்).

இவ்வெற்றியைக் கூத்தர் விக்கிரமசோழன் உலாவிலும் இராசராசசோழன் உலாவிலும் கூறுகிறார்.

—போர்த்தொழிலால்
ஏனைக் கலிங்கம் ஏழினையும் போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே.'' (விக்கிரம: 330-1).

—''பலவுந்
தாணி யொருகவிகை தங்கக் கலிங்கம்
பரணி புனைந்த பருதி—மூரணி
புரந்தர னேமி பொருவ வகில
துரந்தரன் விக்கிரம சோழன்''

(இராசராச: 27 - 28).

விக்கிரமனிடம் தோற்று ஓடிய கலிங்கரைப் பற்றிய செய்தியைக் கூறுகிறார் புலவர்.

''பொருந்த நினையாத போர்க்கலிங்க ரோடி
இருந்த வடவரைக ளெல்லாம்''

(விக்கிரம: 290).

## திருப்பணிகள்

**வி**க்கிரமன் காலத்தில் திருமழபாடிக் கோவிலில் பொறிக்கப்பட்ட சாஸனத்தில் விக்கிரமன் தில்லை கூத்தராசருக்கு நிதிகள் அளித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. அது பின்கண்டவாறு:

'(தங்குல) நாயகத் தாண்டவம் பயிலுஞ் செம்பொன்னம்பலஞ் சூழ் திருமாளிகையும் கோபுரவாசல் கூடசாலைகளும் உலகு வலங்கொண் டொளிவிளங்கு நேமிக்குவட்டிடை உதயகுன்றம் நின்றெனப் பசும்பொன் வேய்ந்து இருநிலந் திளைப்ப இமையவர் களிப்பப் பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும் உயர் புரட்டாதி உத்திரட்டாதியில்.'

தன் குலநாயகம் என்று கூறியிருப்பதால் சோழர்கள் கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக்

கொண்ட பிறகு நடராசப்பெருமானைத் தங்கள் குல தெய்வமாகக் கருதினார்கள் எனத் தெரிகின்றது.

(தமிழ்வரலாறு: பக்கம்-184).

இவன் திருமங்கலத்தில் சிவாலயம் எழுப்பியதாகவும் வைணவமதத்தில் வெறுப்பில்லாதவன் என்றும் தெரிகிறது. திருவரங்கத்தில், 'திருவிக்கிரம வீதி', 'அகளங்கன் வீதி' என்ற வீதிகள் உள்ளன.

## பட்டங்கள்

**வி**க்கிரமன், 'அகளங்கன்' என்ற பட்டத்தை யுடையவன்.

**''அரச னபய னகளங்க னெங்கோன்**
**புரசை மதவரைமேற் போத''**

(விக்கிரம: 152).

இவனுக்குத் 'தியாக சமுத்திரம்' என்ற பட்டமும் உண்டு.

**''செங்கோற் றியாக சமுத்திர நண்ணுதலும்**
**தங்கோ மறுகிற் றலைப்பட்டு''**

(விக்கிரம: 216).

தியாகசமுத்திரம் என்ற பெயருடைய ஓர் ஊர் கும்பகோணத்தின் அருகில் உள்ளது. இவன் பட்டங்கள் சிலாசாஸனங்களிலும் பதினாறும் ஆட்சியாண்டுச் செவிலிமேட்டு வடமொழிச் சாஸனத்திலும் காணப்படுகின்றன.

கூத்தர் தமது உலாவில் விக்கிரமனைப் பலவாறு புகழ்ந்து கூறுகிறார். அவனை முருகக் கடவுளுக்கும் திருமாலுக்கும் ஒப்பிடுகிறார்.

**"—சேபோன்**
**படியின் மதியும் பகலவனுந் தோற்றும்**
**முடியில் ஒருகாலும் மூளா''**

(விக்கிரம: 123).

"—ஆழியான்
சூடிய வாரழ மானையுஞ் சோணாடும்
காடு திரைத்தெறியுங் காவிரியும்
(விக்கிரம: 272-3).

என்பவற்றைக் காண்க.

விக்கிரமன்மீது ஒரு பரணியைக் கூத்தர் இயற்றிய தாகத் தெரிகிறது. அப்பரணி கிடைக்கவில்லை. ஒருகால் அழிந்துபோயிருக்கலாம்.

"செருத்தந் தரித்துக் கலிங்கரோடத்
தென்றமிழ்த் தெய்வப் பரணிகொண்டு
வருத்தந் தவிர்த்துல காண்டபிரான்
மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே"
(தக்கயாகப்பரணி: 776).

இப்பாட்டிற்கு உரையாசிரியர், 'இப்பரணி பாடினார் ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள். இப்பரணி பாட்டுண்டார் விக்கிரமசோழ தேவர்' என்று தமது உரையில் கூறுகிறார். இவ்வுரையினால் ஒட்டக்கூத்தர் கலிங்கப் போர்வெற்றியைக் குறித்து விக்கிரமன்மீது ஒரு பரணிபாடியிருத்தல் கூடுமென்று அறிகின்றோம். இதனுடன் கீழே குறிப்பிட்டுள்ளதை ஒப்பிடுக.

"—வேற்றார்
விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் கலிங்கப்
பெரும்பரணி கொண்ட பெருமான்"
(குலோத்துங்க: 27 - 28).

"—பலவும்
தாணி யொருகவிகை தங்கக் கலிங்கப்
பரணி புனைந்த பருதி—முரணில்
புரந்தர னேமி பொருவு மகில
துரந்தான் விக்கிரம சோழன்"
(இராசராச: 27 - 28).

## இரண்டாம் குலோத்துங்க சோழன்

கூத்தர் இயற்றிய இரண்டாவது உலாவின் தலைவன் இரண்டாம் குலோத்துங்கசோழன். இவன் கி.பி. 1133-ஆம் ஆண்டு முதல் கி.பி. 1150-ஆம் ஆண்டு வரை ஆட்சி புரிந்தான்.

இவன் கரிய நிறமுடையவன் என்று கூத்தர் தெரிவிக்கிறார்.

**"கொற்றக் குலோத்துங்க சோழன் குவலயங்கள்**
**முற்றப் புரக்து முகில்வண்ணன்"**

(குலோத்துங்க: 29).

கரிய நிறத்தை உடையவனாதலால் புலவர் இவனை மேகத்துக்கே அன்றிக் கரிய மலர்க்கும் ஒப்பிடுகிறார்:

**"தடமுகில்அஞ் சனசைலத் தபிடேகஞ் செய்வதேன**
**மஞ்சன மாடி"**

(குலோத்துங்க: 62).

இவன் நிறத்தை மிகவும் சாதுரியமாகப் புலவர் வருணிக்கும் ஒரு கண்ணி:

**"நீலமே வேய்ந்தடுக்க நீலமே பூண்டுடுக்க**
**நீலமே யன்றி நினையாதாள்"**

(குலோத்துங்க: 194).

குலோத்துங்கனைக் கண்ட மங்கை, 'மைம்முகில் வண்ணத்து வானவன்' நிறத்திற்கு ஏற்றவாறு நீல நிறம் பொருந்திய அலர்களை அணிய விரும்பினாள். இக் கண்ணி அவன் கரிய நிறத்தை வெளிப்படுத்த ஒரு சான்றாகும்.

'இந்து மரபில் இருக்குந் திருக்குலத்தில் வந்து மனுகுலத்தை வாழ்வித்த' வாரணவாசி என்ற நங்கை இரண்டாம் குலோத்துங்கனின் துணைவியாவாள். பிதாவின்பெயர் கனகளபன்.

## பட்டங்கள்

இவன், 'அனபாயன்' என்ற பட்டத்தைப் பெற்றுச் சிறப்படைந்தான்.

"ஆழிப் பெருமான் அபயன் அனபாயன்
சூழிக் கடாயானை தோன்றுதலும்"

(குலோத்துங்க: 159).

"பெருமான் அனபாயன் பெரிய மூன்றும்
தருமார வாரத் தழங்க"

(குலோத்துங்க: 315).

தஞ்சையில் இவன் அளித்த நிலங்கள், 'அந பாயநல்லூர்' என்ற பெயருடன் வழங்கப்படுகின்றன.

இவனுக்குப் 'பெரிய பெருமாள்' என்ற பட்டமும் உண்டு.

"பெரிய பெருமாள் பெரும்பவனி வீதி
இரிய வெதிரேற் றிழிந்தான்"

(குலோத்துங்க: 208).

தக்கயாகப்பரணியில்

"நீடிய எண்டிசை நீழல்வாய்ப்ப
நேரிய தெக்கிண மேருவென்னப்
பீடிகை தில்லை வனத்தமைத்த
பெரிய பெருமாளை வாழ்த்தினவே" (773)

என்ற தாழிசையும் இதைக் காட்டும்.

## வீரச் செயல்கள்

இரண்டாம் குலோத்துங்கனைப்பற்றிய செய்திகள் இவன் காலத்துச் சாஸனங்களில், 'புகழ் சூழ்ந்த புணரி', 'புகழ்மாது விளங்க', 'வீரமே துணை' என்ற புகழ்ச் சொற்களுடன் தொடங்குகின்றன. முடியிழந்து சிறைப்பட்ட மன்னர்களை விடுவித்து, அவர்கள்

கப்பங்கட்டுவதை நிறுத்திய செய்தியை உலாக் கூறு கின்றது.

"முறைவிட்ட வேற்று முடிமன்னர் தத்தம்
சிறைவிட் டரசருளிச் செய்து"

(குலோத்துங்க: 33).

இவன் வீடுதோறும் தேர்வகுத்ததாகப் பின்வரும் கண்ணி வருணிக்கின்றது.

"புனையா மணியாலும் பொன்னாலும் மின்ன
மனையா லோர்தேர் வகுத்து"

(குலோத்துங்க: 57).

இதனைத் தக்கயாகப்பரணியிலும் காணலாம்.

"பார்தரு வார்பெற மாறில் பசும்பொற்
றேர்திரு மாபர கேசரி வாழியே"

(தக்க: 807)

"தீவிய மாதவியுஞ் செங்கழு நீரும்
வலம்புரியும் தாதகியுங்"

(குலோத்துங்க: 115)

கொண்ட மாலைகளைத் தரித்துக்கொள்வானும்.

## திருப்பணிகள்

இரண்டாம் குலோத்துங்கன் செய்த திருப் பணிகள் குலோத்துங்கன் உலாவில் (38 - 58) அழகாக வருணிக்கப்பட்டுள்ளன. கற்பகத் தருதானம், சுவேமாப் பிரதானம், விசுவ சக்கரதானம், மகாதானம், சுரபிதானம் ஆகிய இவைகளை அருளுகின்ற அடியார் களுக்கு எத்துதலைத் தரும் கடவுளது, 'எல்லையில் ஆனந் தக் கூத்துக் களிகூரக் கும்பிட்டுத் தில்லையம்பல முன்றி லின், 'சிறு தெய்வத் தொல்லைக்குறும்பு தொலைத் தெடுத்து' அருள் நிறைந்த சிவபெருமானுக்குப் பசும்பொன்னால் செய்த பூர்ணகும்பம் செய்வித்து,

குல்வச்சிரப் பலகையை ஆதனமாகப் பதிப்பித்து, 'மலர் கவிகை காக்குங் கடலேழின் முத்தும், வரகங்கைத் தூக்கும் மருவிற் சூழ்போக்கி', திருத்தீபமேற்றி, பதுமைப் பீடம் சமைத்து, திருப்பேரும் பேரம்பலமும் கோபுரமாடமும் மாளிகையும் கட்டுவித்து, ஏழு நிலைகளையுடைய கோபுரங்கள் விளங்க, மகரம் கொள்ளப் பட்ட கோபுரங்கள் விமானச் சிகரங்கள்போல் திக ழச் செய்து பல திருப்பணிகள் செய்வித்தான். இவன் அம்பிகை கோவிலில் உள்ள திருமுற்றத் தைச் செம்பொன்னாலாக்கி, பொற்கடாரப் பாத்திரங் களில் பனிநீர் நிரப்பித் திருக்காமக்கோட்டம் சிறப்பித் தானும்.

(குலோத்துங்க: 38 - 58).

இவன் தில்லைக் கோவிந்தராசப் பெருமாளை எடுத் தெறிந்ததாகத் தெரிகிறது.

" .. .. .. போத்தின்மேற்
றில்லைத் திருமன்ற முன்றிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து"

(குலோத்துங்க: 38 - 39)

என்றதாலும்,

"பொன்னிற் றுயிற்றிப் புறம்பிற் குறும்பனைத்தும்
முன்னிற் கடலகழின் மூழ்குவித்த"

(இராசராச: 33)

என்றதாலும்,

"முன்றிற் கிடந்த தடங்கடல்போய்
முன்னைக் கடல்புகப் பின்னைத்தில்லை
மன்றிற் கிடங்கண்ட கோண்டல்"

(தக்க: 777)

என்று காணப்படுவதாலும் இவ்விஷயம் உறுதி பெறு கின்றது.

இவன் செய்த திருப்பணிகள் திருப்புறம்பியத்தி லுள்ள இவனது ஏழாம் ஆட்சியாண்டுச் சாஸனத்தில் கூறப்பட்டுள்ளன. இவன் தலைவர்களில் ஒருவனை மோகனுட்கொல்லி, குலோத்துங்கன் காலத்தில் திருநாமநல்லூர், திருவதிகை, விருத்தாசலம் முதலிய இடங்களில் திருப்பணிகள் செய்ததாகச் சாஸனங்கள் கூறுகின்றன.

## இரண்டாம் இராசராச சோழன்

கூத்தர் கடைசியாகப் பாடிய உலாவின் தலைவன் இரண்டாம் இராசராச சோழன். தக்கயாகப்பரணியி லும் இவன் வரலாற்றைக் கூத்தர் கூறுகிறார். இவன் கி. பி. 1146 - ஆம் ஆண்டில் அரசுகட்டிலேறினான். இவனுக்குப் புவனமுழுதுடையாள், தரணிமுழுதுடை யாள், உலகுடைய முக்கோக்கிழானடிகள், அவனி முழுதுடையாள், தென்னவன் கிழானடிகள் என்று ஐந்து மனைவிகள் இருந்தனர். இவர்களுள் புவன முழுதுடையாள் பட்டத்து இளவரசி. இவன் கரிய நிறமுடையவன் என்று தெரிகிறது.

"முட்ட முயன்ற விறலியர் முன்னிருப்ப
இட்ட தவிசின் மிசையிருந்து—பட்டினஞ்சூழ்"

"பொன்னிக்குங் கோதர் விரிக்கும் பொருநைக்கும்
கன்னிக்குங் கங்கைக்குங் காவலனை"

(இராசராச: 231, 232).

மேல் கூறப்பட்ட அடிகளினால், காவிரிப்பூம்பட்டி னத்திலுள்ள புகார் வீதியில் இவன் உலாப்போந்த தால் காவிரிப்பூம்பட்டினம் இவன் காலத்தில் தலை நகரமாக விளங்கியது என்று தெரிகிறது. தஞ்சை, பழையாறை, கங்கைகொண்டசோழபுரம் இவை சிறந்த நகரங்களாக விளங்கின என்று சாஸனங்கள் கூறுகின்றன.

## பட்டங்கள்

'வரராசராசன்' என்ற சிறந்த பட்டத்தையுடையவன் இராசராசன்.

"உடுத்த திகிரிப் பதிஞ லுலகம்
அடுத்த வரராச ராசன்"

(இராசராச: 37)

என்றும் தக்கயாகப் பரணியில், 'வாழி வரராச ராசனே' (549, 812) என்றும் கூத்தர் கூறியுள்ளார். கண்டன், கோநேரின்மை கொண்டான், சோழேந்திர சிம்மன் என்ற பட்டங்களையும் இவன் பெற்றவன் என்பது பின்வரும் அடிகளால் தெரிகின்றது.

"கண்ணன் கனகளபன் கண்டன் கதிரோனும்
தண்ணேன் கவிகைச் சனநாதன்"

(இராசராச: 38).

'முத்தமிழுக்குத் தலைவன்', 'ராத பண்டிதன்' என்று மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன. 'பூ மருவிய பொழிலேழும், புயல் வாய்த்து வளம்பெருக' என்று தொடங்கும் மெய்க்கீர்த்திகளும் உண்டு. இவற்றோடு இவனுக்குத் 'தெய்வப் பெருமாள்' என்ற பட்டமும் உண்டு.

"சேனையு மன்னருந் தெய்வப் பெருமாளும்
யானையும் நிற்க எதிர்நின்று"

(இராசராச: 363).

## திருப்பணிகள்

திருப்பனந்தாளிலிருந்து ஸ்ரீ தாடகேச்சரத்து நாயகர் தீர்த்தங்கொடுக்கக் கொள்ளிடம்வரை இராசராசன் ஒரு சாலை அமைத்தான். அச்சாலைக்கு, 'ராஜகம்பீரன் திருவீதி' என்ற பெயரைச் சூட்டினான்.

"அஞ்சன சைலத் தபிடேகஞ் செய்வதேன
மஞ்சன மாடி வழிமுதற்—செஞ்சடை
வானவன் போற்றள் வணங்கி மறையவர்க்குத்
தான மனைத்துந் தகைபெறுத்தி"
(குலோத்துங்க: 62-63)

என்ற அடிகளால் மேற்கூறிய செய்தியை அறியலாம். இவன் தாராசுரத்தில் சிவாலயம் ஒன்றையும் எழுப்பினான். அங்கே அக்காலத்தில் நிறுவப்பட்ட இராச கம்பீர மண்டபம் இன்றும் உள்ளது.

## தமிழ் அபிமானம்

'முத்தமிழுக்குத் தலைவன்', 'ராத பண்டிதன்' என்று மெய்க்கீர்த்திகள் கூறுவதால் இவனுக்குத் தமிழின்பாலுள்ள அபிமானம் வெளியாகிறது. இவன் பல புலவர்களை ஆதரித்து வந்தான். இவன் காலத்தில் ஒட்டக்கூத்தர் ஆஸ்தானக் கவிஞராக இருந்தார்; மிக முதிர்ந்த வயது. முதுமையின் காரணமாக அவர் எழும்போதும் நடக்கும்போதும் தளர்ச்சியுறுவது கண்டு இராசராசன் ஒரு முறை தன் கைகொடுத்து உதவினான். இவ்விஷயத்தைத் தெரிவிக்கும் பாட்டு ஒன்று தமிழ்நாவலர் சரிதையில் இருக்கின்றது.

"கோலமைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசேக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவோன்னர்
தலையைத் தடவி நடக்துங்கோல் யானைச் சயதுங்கனே"
(பக்கம்: 49).

'இராசராசன் கைகொடுத்தபோது கூத்தர் பாடியது' என்ற தலைப்பின்கீழ் உள்ளது இது. இந்தப் பாட்டினால் இராசராசன் புலவரிடம் வைத்திருந்த அன்பும் அபிமானமும் மரியாதையும் விளங்குகின்றன. இவன்மீது பாடிய உலாவை அரங்கேற்றுகையில் ஒவ்

வொரு கண்ணிக்கும் ஓவ்வோராயிரம் பொன் இராச-ராசன் வழங்கினதாகச் சங்கர சோழனுலாவில், 'தெள்ளித்தம், முன்ன யகரிலவன் மூதிலாக் கண்ணி தொறும், பொன்னு யிரஞ்சொரிந்த பூபதி' என்று கூறப்பட்டுள்ளது. இவன்காலத்தில்தான் கூத்தர் தக்கயாகப்பரணியைப் பாடினர். அதில் கடவுள் வாழ்த்திலும் இறுதியிலும் இவனைப் பலவாறு புகழ்ந்திருக்கிறார்.

முன் கூறப்பட்ட விக்கிரமன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் ஆகிய இவர்களின் வெற்றிகள், திருப்பணிகள், தமிழ் அபிமானம், பட்டங்கள், செங்கோல் மற்றும் பல விஷயங்கள் அக்காலத்திலும் அவர்களுக்குப்பின் அரசு புரிந்த சோழர்களது காலத்திலும் எழுந்த சாஸனங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இந்தச் சாஸனங்களின் விஷயங்களைக் கூத்தர் தம் மூவருலாவில் வருணித்த செய்திகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அநேக விஷயங்களில் ஒற்றுமை புலப்படும். ஒரு சோழனின் செயலை ஓர் உலாவில் மட்டும் கூறாது மற்ற இரண்டு உலாக்களிலும் வருணிக்கிறார் கூத்தர். குலோத்துங்கன் தில்லையில் கோவிந்தராசப் பெருமானை எடுத்தெறிந்த விஷயத்தைக் குலோத்துங்கசோழன் உலாவில் மட்டும் கூறாது இராசராசசோழன் உலாவிலும் (337), தக்கயாகப்பரணியிலும் (777) கூறுகிறார். இச்சோழர்கள் திருப்பணிகளை உலாக்களில் நோக்குமிடத்து அவர்களுடைய மதமும் அவர்கள் வழிபட்ட குலதெய்வங்களும் மற்ற மதங்களின்பால் இவர்கள் வைத்த மதிப்பும் காட்டிய வெறுப்பும் தெரிகின்றன. கூத்தர் வருணித்த திருப்பணிகளை மெய்க்கீர்த்திகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டபிறகே சோழர்கள் சிதம்பரம் நடராசரைக் குலதெய்வமாகக் கொண்டார்கள் என்று தெரிகிறது. 'அஞ்சன சைலத் தபிடேகஞ் செய்வதென, மஞ்சன மாடி வழிமுதல்' செய்வித்த

இராசராசன் என்று கூறுகிறார் கூத்தர். அவன் அமைத்த சாலை, 'ராஜகம்பீரன் திரு வீதி' என்று இன்றும் அழைக்கப்படுகிறது. இது ஒரு சரித்திரச் செய்தியாகும். விக்கிரமசோழன் தென்கலிங்க நாட்டின் மீது படையெடுத்துத் தெலுங்கவீமனைத் தோற்கடித்து வாகைசூடித் திரும்பியதாகச் சரித்திரம் கூறுகிறது. இதனைக் கூத்தர் விக்கிரமசோழன் உலாவிலும் (330-331), குலோத்துங்க சோழன் உலாவிலும் (27-28), இராசராச சோழன் உலாவிலும் (27-28) வருணிக்கிறார். கூத்தர் கூறிய அநேக விஷயங்களையும் சம்பவங்களையும் சாஸனங்கள் ஊர்ஜிதப்படுத்துகின்றன.

32

# 7

# முன்னோர்கள் பெருமை

இம்மூன்று உலாக்களிலும் முற்பகுதிகளில் உலாக்களின் பாட்டுடைத் தலைவர்களின் முன்னோர்களை விரிவாகக் கூறுகிறார் கூத்தர். அவர்கள் செய்த வீரச் செயல்களும் செலுத்திய செங்கோலும் வருணிக்கப் பட்டுள்ளன.

செங்கோல் புரிவதில் இணையற்ற மாந்தாதாவைக் கூத்தர் வருணிப்பதை நோக்குவோம்.

"ஆடு துறையில் அடுபுலியும் புல்வாயும்
கூடநீ நட்டிய கோற்றவனும்"

(விக்கிரம: 5).

"போந்த புலியுடனே புல்வாய் ஒருதுறைநீர்
மாந்த உலகாண்ட மன்னர்பிரான்"

(குலோத்துங்க: 7).

"புக்க துறையிற் பகைப்புலியும் புல்வாயும்
ஒக்க வோருகாலத் தூட்டினோன்"

(இராசராச: 5).

மாந்தாதாவைப்பற்றி மூன்று உலாக்களிலும் கூறுகிறார். ஏதேனும் ஒன்றைச் சிறப்பித்துக் கூறுங்கால், 'மனு மாந்தாதா' காலத்தில் இவ்வாறு நடந்தது என்று கூறுவர் மக்கள். அத்தன்மை வாய்ந்த கீர்த்தியும் சத்தியமும் ஒற்றுமையும் ஒன்று சேர்ந்து விளங்கிய செங்கோல் அது!

இனி, 'பொன்னிக்குக் கரைகட்டிச் சோணாட்டை வளம்படச்' செய்த கரிகாலனைப்பற்றிக் கூத்தர் கூறுவதைப் பார்க்கலாம்.

—"தெள்ளருவிச்
சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதி"

(விக்கிரம: 13).

'கிரிதிரித்து' என்று கூறியதற்குத் தக்கயாகப் பரணியின் உரையைக் கவனிக்க. 'பொன்மலை இவனதாதற்குக் காரணம் மகாமேருவின் அடி-முதல் முடிகடை சோழர்களால் எழுதப்பட்ட புலிப் பொறியே யாதலாலும் கரிகாலன் கைச்செண்டால் திரித்தான் என்னும் கதை உண்டாதலாலும்' (தக்க: 185 உரை) என்று காணப்படுகிறது.

"மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதாள்
கண்கொண்ட சென்னிக் கரிகாலன்"

(குலோத்துங்க: 18),

"கன்மலை மார்புங் கடவுள் வடமேருப்
பொன்மலை மார்பும் புலிபொறித்தோன்"

(இராசராச: 17).

இந்தக் கண்ணிகளில் கரிகாலன் வீரச் செயல்களையும் நாட்டின் வளத்திற்காக அவன் செய்த அரிய தொண்டையும் விவரித்துள்ளார் புலவர்.

பெருந்தன்மையையே உருவாகக்கொண்ட கோச்செங்கட் சோழனின் அரிய செயலைப் பார்ப்போம். இது ஒரு சரித்திரச் செய்தியாகும்.

"மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திவனும்"

(விக்கிரம: 14).

பொய்கையார் தாம் பாடிய களவழி நாற்பதைக்கொண்டு சேரமான் கணைக்காலிரும்பொறையை விடுவித்து அவன் கால்களில் பொருத்தப்பட்ட தளைகளை நீக்கிய கோச்செங்கட் சோழனின் பெருந்தன்மையை இவ்வடிகள் கூறுகின்றன.

"படுத்துப் பொறையனைப் பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்",
(குலோத்துங்க: 20),

"நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் காற்றளையை விட்டகோன்"
(இராசராச: 18).

புறநானூற்றில் இந்தச் சரித்திர விஷயம் இருப்பதால் அதை அடிப்படையாகக் கொண்டு சிறிது மாற்றத்துடன் இவர் கதையை ஆண்டிருப்பதாகத் தெரிகிறது.

போர்க்களத்தில் புறங்காட்டி ஓடாது பகைவன் அம்புகளை அஞ்சா நெஞ்சத்துடன் தன் மார்பில் வாங்கிக்கொள்ளும் விசயாலய சோழனை இவர் வருணித்திருப்பதைக் கவனிப்போம்.

"எண்கொண்ட தொண்ணூற்றின் மேலும் இருமூன்று
புண்கொண்ட வென்றிப் புரவலனும்"
(விக்கிரம: 15);

"சீறுஞ் செருவிற் றிருமார்பிற் றெண்ணூறும்
ஆறும் படுதழும்பி னாகத்தோன்"
(குலோத்துங்க: 21);

—"புல்லார்
தொழும்புடைய ஆகத்துத் தொண்ணூறும் ஆறும்
தழும்புடைய சண்டப்ர சண்டன்"
(இராசராச: 19);

புரவலன் தன் மார்பில் தொண்ணூற்றாறு தழும்புகள்கொண்ட வீரச் செய்கை கூறப்பட்டுள்ளது.

யாவரும் வணங்கும்படியான அகன்ற மார்பில் தொண்ணூறு தழும்புகள் இருந்ததால் அவன் வீரர்களுக்குள் சிறந்த வீரன் என்று கருதிச் 'சண்டப்ரசண்டன்' என்று கூறினர் புலவர்.

சோணாட்டை வியாபித்தவனும், 'சுங்கந் தவிர்த்த சோழன்' என்ற புகழ் பெற்றவனுமான முதலாங் குலோத்துங்கனைப்பற்றிக் கூறுவது பின்வருமாறு:

**"கடல்கொண்டு கொங்கணமும் கன்னடமும் கைக்கொண் டடல்கொண்ட மாராட் டரசை—உடல"**

**"இறக்கி வடவரையே யெல்லையாத் தொல்லை மறக்கலியுஞ் சுங்கமும் மாற்றி"**

(விக்கிரம: 25 - 26);

இவ்வடிகளால் குலோத்துங்கன் கைப்பற்றிய நாடுகள் புலப்படுகின்றன.

**"புவிராச ராசர் மனுமுதலோர் நாளில் தவிராத சுங்கந் தவிர்த்தோன்"**

(குலோத்துங்க: 26);

மனுவேந்தன் காலம் முதலாக வந்த சுங்கத்தைத் தவிர்த்துத் தருமத்தை வளர்க்கும் ஆக்ஞாசக்கரத்தை யுடைய சோழன் என்று புகழ்கிறார் புலவர்.

அவன் காலத்தில் சோணாட்டில் ஏற்பட்ட குடிகளின் கலகத்தைக் கூறுகிறார். இது ஒரு சரித்திர சம்பவமாகும்:

**"கலகமுஞ் சுங்கமுங் காய்கலியும் மாற்றி உலகைமுன் காத்த உரவோன்"**

(இராசராச: 26);

கலகம் என்றது சோணாட்டில் ஏற்பட்ட குடிகளின் கலகத்தைக் குறிக்கும். இக்கலகத்தை முதற்குலோத் துங்கன் நசுக்கி அமைதியை நிலைநாட்டினான்.

இவர்களைத் தவிர மற்ற அரசர்களின் சிறப்புக்களை யும் வருணிக்கிறார்:

**—"தரையின்**
**பெருமகளைத் தீவேட்ட பின்னருஞ் சேடன்**
**திருமகளைக் கல்யாணஞ் செய்தோன்"**

(இராசராச: 16);

இவ்வடிகளில் கிள்ளிவளவன் பூமிதேவியை நெருப்பின் முன் மணம் புரிந்த பிறகு நாககன்னியை மணந்த செய்தியை மிக நயமாகவும் சாதுரியமாகவும் கூறுகிருர்.

'வஞ்சப் புருநிறை புக்க புகழோன்' என்று சிபிச் சக்கரவர்த்தியின் தியாகத்தையும், 'சுரநதிதன் பெயரா கச்சுருதி, வானதி சாபத்தை மாய்த்தோன்' என்று பகீரதனையும், 'தூங்கும் புரிசை துணித்தகோன்' என்று தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியனையும் புகழ்ந்துள்ளார்.

# 8

# பவனி வருதல்

இம் மூன்று உலாக்களிலும் பாட்டுடைத் தலைவர்கள் பவனிவரும் காட்சிகளை மிகவும் அழகாகத் தீட்டியுள்ளார் கூத்தர். உலாவின் முதலில் முன்னோர் களின் பெருமையை வருணித்தபின் தலைவனுடைய சிறப்பைக் கூறி முடித்துவிட்டு அவன் பவனி வரும் காட்சியைக் கூறுகிறார்.

விக்கிரமசோழன் உலாவில் விக்கிரமன் உலாவருதல் மிக்க எழிலுடன் வருணிக்கப்பட்டுள்ளது. உலாப் புறப் படுவதற்குமுன் விக்கிரமன் தன்னை அலங்கரித்துக் கொள்ளுகிறான். தானத்தின் குறைபாடுகளை முடித்துக் கொண்டு, கலைமகள் வதனத்தின்கண் விளங்க, மகரக் குழைகள் காதுகளில் ஒளிர, தோள்களில் சய மாதும் கேயூரமும் பொலிய, கையில் கீர்த்திமகளும் கடக மும் விளங்க, மார்பில் திருமகளும் கௌத்துபமும் ஒளி வீச, துர்க்கை வீற்றிருக்கும் உடைவாள் இடையில் தொங்க, அளவிலா நிறங்களையுடைய பேரழகு பொலிய, 'காமன் சிலைவணங்க வாங்கிய கட்டழகு'டன் அலங்கார மண்டபத்தை விட்டு நீங்கி, அயிராபதத்தின்மீது ஏறி, 'கொற்றக் கவிகை நிழற்றக் குளிர்திரட்டைக் கற்றைக் கவரியினங் காலசைப்ப, வலம்புரி ஊத, சிலம்பும் முரசும் முழங்க, வாளேந்திய தானை சுற்றிவரக்' கிளம் பினான். அமைச்சர்களும் தானைத் தலைவரும் சிற்றர சரும் புடைசூழ அவன் வெளிவந்தான்.

குலோத்துங்கசோழன் உலாவில் குலோத்துங்கன் உலாக் கிளம்பும் காட்சியைப் புலவர் வருணித்திருப் பதை நோக்குவோம்: வெண்கொற்றக் குடை யானையின்

மீது விளங்க, ஒற்றை வலம்புரி முன்னூத, அதன் பின் மற்றச் சங்குகள் ஒன்றாக ஒலிக்க, முரசுகள் மாறி மாறி முழங்க, 'அவிர்வாளும் சங்கும் திகிரியுஞ் சார்ங்கமுந் தண்டமும் எங்குஞ் சுடர்விட் டிருள்களைய' மன்னன் முன்செல்ல, பின்னால் விற்கொடிச் சேரனும் மீன்கொடிப் பாண்டியனும் மண்டலீகரும் சோழன் புகழைச் சொல்லிப் புரவிமிசை கொண்டு போத, அருவிபோல் விட்டு மதம்பொழியும் களிறுகள் எண்திசைகளிலும் செல்ல, மாகதரும் மங்கலப் பாடகரும் புடை சூழ, செல்வத்தைச் சிந்தியவண்ணம் மாடத்தை அடைந்தான் குலோத்துங்கன். அவனைத் தரிசிக்க எண்ணிய மக்கள், 'சாலேதோறும் திரள்வார், சாளரங்கள் கைக்கொள்வார்', மற்றும் பலர், 'நெற்றி சுருங்க நெருங்குவார்'. (குலோத்துங்க: 84 - 110).

இனி மூன்றும் உலாவின் தலைவன் உலா வரும் காட்சியின் வருணனை பின்வருமாறு:

இரண்டாம் இராசராசன் குலரத்னத்தோகையுடன் மகிழ்ச்சிமிகத் துயிலெழுந்து, பல முரசங்கள் ஒலிக்க, காவிரித் தீர்த்தத் தபிடேகஞ் செய் தருளி, தம் முன்னோர்க்கும் விண்ணவர்க்கும் வேதியர்க்கும் காலையில் செய்ய வேண்டிய கோதானம் முதலிய கடன்களைச் செய்துவிட்டு, 'பிதாமகன் காலே வரும் பேரணி' என்று சொல்லும்படியான கிரீடத்தைச் சூடிக்கொண்டு, வலம்புரியும் முரசுகளும் மாறி மாறி ஒலிக்க, தவளத்திரிபுண்டரத்தை நெற்றியில் சாத்திக்கொண்டு, தில்லைத் திருநடனத்தை மனத்தில் சிந்தித்துக்கொண்டு, வல்லவர் சூழப் பட்டத்து யானையின்மீது அமர்ந்து, மயிற்பீலிக் குடைநிழலில் புலிக்கொடி விளங்க, 'தென்னரும் சேரலரும் சிங்களரும் கொங்கணத்து மன்னரும் மாளவரும் மாகதரும் பின்னும் காந்தாரர், காலிங்கர், கௌசலர் உள்ளிட்ட பூந்தார் நரபாலரும்' புடைசூழப்

புகார்ப் பொன்மாடவீதியில் பவனி வந்தான். இந்திரன் பொன்மழையைப் பொழியும் புட்கலாவர்த்தம் பொழிய, சப்த மாதர்கள் பூமழை பொழிய, மேரு மலையிற் பெரும்புலி தீட்டிய வாள் விளங்க, நவமணியாற் செய்த காதணியின் ஒளி ஒன்பது கோள்களின் ஒளியையும் ஒடுக்க, ஆதிசேடனும் வாசுகியும் இருதொடிகளாக விளங்க, அம்பருத் தாணியையிட்ட முதுகோடும் தோளிற் சிலையோடும் உலாப் போந்தான். உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் என்ன அழகிய வருணனை! (41 - 68).

இம்மூன்று உலாக்களிலும் சோழர்கள் பவனி கிளம்பும் காட்சியை அழகாக வருணித்துள்ளார் கவிஞர். இதனல் சோழமன்னர்கள் காலையில் எழுந்து தங்கள் கடன்களை முடித்துவிட்டு நற்காரியங்கள் தொடங்குவர்; உலாப் போவதற்கு முன் தங்களை நன்ருக அலங்கரித்துக்கொள்வர்; பிறகு தாங்கள் வென்ற அரசர்கள் புடைசூழ உலாக் கிளம்புவர். கன்னடரும் மராட்டரும் கலிங்கரும் குடகரும் விக்கிரமனைச் சூழ்ந்து சோழன் புகழைக் கூறிச் செல்வதால் அவர்கள் சோழனுக்குக் கீழ்ப்படிந்த அரசர்கள் என்று தெரிகிறது. சோழர்களால் நியமிக்கப்பட்ட பல தலைவர்கள் - வாணகோவரையன், அனந்தபாலன், திருமறையோன் கண்ணன் - அரசனுக்குத் துணைவர்களாக விசுவாசத்துடன் இருந்தார்கள் என்று தெரிகிறது. இவர்கள் யாவரும் ஒப்பற்ற தலைவர்கள்.

குலோத்துங்கன் சேரனையும் பாண்டியனையும் கீழ்ப்படியச் செய்தான் என்று அறிகின்ருேம். எண் திசைகளிலும் சோழர்கள் புகழ் பரவச் செய்ததை எண்டிசைக் களிறுகளை அடக்கினர்களென்று நயமாகக் கவி கூறுகின்ருர். இராசராசன் செய்த காலைக்கடன்களை ஆராய்ந்தால் அவன் மதத்தில் மிகவும் பற்றுள்ளவனென்றும் தெய்வபக்தி கொண்டவ

னென்றும் வைதிகனென்றும் புலப்படுகிறது. சிங்களரையும் மாகதரையும் கலிங்கரையும் கோசலரையும் இவன் வென்றதாகத் தெரிகிறது. ஆகையால் 'வடநாட்டு வேந்தர்களும் கடல் கடந்த அரசர்களும் இவனுக்குப் பணிந்திருந்தார்களென்பது வெளிப்படையாகிறது. குழாங்களின் வாயிலாகச் சோழனுடைய கருணையையும் புகழையும் புலவர் வருணிக்கிறார்.

௯

# எழுவகை மகளிர்

இனி இவ்வுலாக்களில் கூறப்பட்ட எழுவகை மாதர்கள் வருணனையைப் பார்ப்போம். அவர்கள் முறையே பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்.

## பேதை

விக்கிரமன் உலாவருதலை முரசுகள் முழங்கித் தெரிவித்ததும் பேதை மனையை விட்டு வெளியே வருகிறாள். 'வளரும் இளந்திங்கள்' போன்ற அவள் ஒரு, 'கொழுங் கொழுந்து'; முடிக்கக் கூந்தலில்லாத பருவத்தையுடையவள்; 'கோகிலத்தின் பிள்ளை'; 'இளவன்னப்பேடை'; 'கள்ளம் தெரியாப் பெருங்கட் சிறுதேறல்; தாயர்ப் பிரியாப் பருவத்துப பேதை'; 'சென்னிதன் கொற்கைக் குளிர்முத்த வல்சியுடன் சோறடுகை' கற்பதற்கு வீதியில் புகுந்து விளையாடும் போது விக்கிரமன் காட்சி அளித்தான். பேதையின் கண்ணும் மனமும் மன்னன் மாலையினிடத்தே செல்ல உள்ளத்தில் மகிழ்ச்சியடைகிறாள். 'வம்மின்கள், அன்னைமீர், மாலையிது வாங்கித் தம்மின்கள்' என்று உரைக்க மருங்கில் நின்ற தாயர் கழுநீர் மாலையை வாங்கி அப்பேதையை மற்ற மகளிருடன் ஒன்றாக இருக்கச் செய்தார்கள்.

(விக்கிரம: 131 - 134).

குலோத்துங்கனைச் சந்தித்த பேதை முத்தாற் செய்த சிறுதொடியை அணிந்தவள்; 'முகில் முழங்கினும் ஆடாத தோகை'; 'மலராத புண்டரிகம்';

'பாடிப் பயிலாத பசுங்கிள்ளை'; 'வளராத கற்பகவல்லி'; குறுகிய வளர்ச்சியையுடைய குழலுடைய பேதை; முலைத் தாயரும் கைத்தாயரும் சோழனை வணங்க அவர்களைப்போல் தானும் வணங்கினாள்; ஏங்கினாள். தலைவனுடைய முத்துமாலையைத் தன்னுடன் விளையாடும் அன்னங்கள் நீந்தும் நீரோடையென்றும் திருப் பள்ளித் தொங்கலைத் தன்கிள்ளைக்கும் பூவைக் கும் விளையாடுவதற்கு நல்ல பொழிலென்றும் அயிரா பதத்தை மலையென்றும் தெய்வக் கவிகையைத் தனது மான் வாழும் நல்ல மதியென்றும் கற்பனை செய்வாள். சோழனது குவளை மாலை, கற்பக மாலை களைத் தனக்குப் புனையும்படி கூறுவாள். இவள் செய்கை களால் சோழனிடத்தில் அவளுக்கு உழுவலன்பு ஏற்பட்டது என்பது தெரிகிறது.

(குலோத்துங்க: 123 - 140).

இரண்டாம் இராசராசனைக் கண்ட பேதை முதிர்ந்த அன்பு நிறைந்த செவிலித் தாயாரிடம் அடைக்கலமடைந்தவள்; 'தோகை தொடா மஞ்ஞை'யின் தோற்றத்தை யுடையவள்; சுற்றத்தாருக்கு ஒரு கரும்பு; வளைந்த கேசத்தையுடையவள். 'எம்பாவை யெங் கொல்லிப் பாவை யெனப்படும், அம்பாவை பாடும் படியறியாள்'. பொன்னியன்றி வேறு ஆறுகளில் நீராடாள். 'ஞாலத்து இறைவனை' ஓவியம் தீட்டுவாள். செவ்விய கண்களையுடைய அவள் முழுமுத்துக்களால் சிறுமனைகளைக் கட்டுவாள். சோழனைக் காணவேண்டும் என்ற வேட்கை கொண்டு, 'தாகம் தணியத் தணியத் தம ரும் பிறரும், பணியப் பணியப் பணிந்தாள்.' சோழனது அயிராபதத்தையும் கோரத்தையும் கும்பிட்டாள்.

(இராசராச: 115 - 132).

பேதையின் அறியாப்பருவத்தை ஊடுருவி ஆராய்ந்துவிட்டார் கூத்தர். அவள் மாசற்ற மனத் தின்கண் வழுவில்லாத எண்ணங்கள் அலை அலைகளாக

எழுந்து அடங்குவதைச் சித்திரமாகத் தீட்டிவிட்டார். சோழனுடைய அணிகள் தனவென்றும் தனக்குச் சொந்தமான பொருள்களுக்கு உரியவை என்றும் பேதை நினைந்ததைக் கூத்தர் ஒருவர்தான் அறிய முடியும் என்பதைக் கண்ணிகள் எடுத்துக் கூறி விட்டன. 'முற்றிலெடுத்துக் கொழித்து முழுமுத்தால் சிற்றில் இழைக்கின்ற' பேதையின் செயல்களைக் கூத்தரைவிட மிக்க எழிலுடன் வருணிக்கும் புலவர் இருப்பரோ என்று சந்தேகங்கொள்ள வேண்டிய நிலைமையில் நாம் இருக்கின்றோம்.

## பெதும்பை

பேதைப் பருவத்தை அடுத்து வருவது பெதும்பைப் பருவம்.

விக்கிரமனைக் கண்ட பெதும்பை முன்பு பேசிய மழலைச் சொற்களை விட்டுவிட்டுக் குழலின் இசை போன்ற மொழியைப் பேசுகிறாள். 'பின்னர் நகை கொண்ட பெற்றியாள்.' விடம் போன்ற பார்வையுடையவள். வானுடைய மின்னுடக்கம் வாங்கியவள். இளைய பெண்யானையின் நடையையுடையவள். பவளம் போன்ற பாதங்களில் பொன் அணிகளை அணிந்தவள். உச்சிக்கொண்டையை யுடையவள். வேலையுடைய முருகன் போன்ற ஆடவரும் தவசிகளும் மயங்கும்படி வாய் சிவப்பாள். சோழனைக் கண்டவுடன், 'காமங் கலக்கக் கலங்கிக் குழல்சரியத் தாமஞ் சரியத் தனி நின்றாள்.'

(விக்கிரம: 135 - 143).

குலோத்துங்கனைச் சந்தித்த பெதும்பை, 'கொற்ற முடியனைய கொண்டையாள்' பருத்த முத்துக்கள் கோத்துத் தாழவிடப்பட்ட தலைப்பாளையாள்; கொலையுறங் கண்ணாள். இவ்வல்லி, 'நல்கூர்ந்தார் செல்வ மகள்' என்று பார்ப்போர் துணியும்படியான

தன்மையை உடையவள். தான் வளர்க்கும் கிள்ளைக்கு வாயினால் முத்தமருளி, 'மணிவாயாற் சொல்லுவாய்' என்று அதனிடம் கூற, அது கூறுவதைக் கூறும் கிளியாதலின் மௌனம் சாதிக்க, 'யான் கேட்பதற்கு நீதான் சொல்லும் திறமை வாய்ந்தவள்' என்று கெஞ்சிச் சோழனின் கீர்த்திகளை வினவுவாள். சோழனது கடாயானை தோன்றலும் முன்சென்று தளிர் போன்ற கைகளைக் குவித்து நின்றாள். வாடைக்கும் தென்றற்கும் முல்லையும் சேமாவும் தழைத்து வாழுவதுபோல் நின்றாள். அவள் உருவத்தின் அளவன்று அவள் ஒளியினது மிகுதியும் வளர்ச்சியும். மந்தாகினிக்கோனின் திருப்புருவ வார்சிலையும் செந்தாமரைக் கண்ணும், தையலிடத்தில் காமசூத்திரத்தின் மெய்ப்பாடுகள் உண்டாகக் காரணமாயின; அவள் மயக்கமுற்றாள். அவளை, 'வளைத்தளிர்ச் செங்கை மடுத்தெடுத்து வாசக் கிளைத்தளிர் பாயில் படுக்கவைத்து'க் கூட இருந்தோர் பின்வருமாறு கூறினர்: 'நீ கூறுவதுபோல் எழும் குரல் ஆயர் குழலல்ல; அது நம் தலைவன் வாசிக்கும் குழலாகும். ஒளிக்கும் வஸ்து நிலாவல்ல; அது நம் தலைவனின் புகழாகிய நிலாவாகும். முழங்குவது வாத்தியமல்ல; அது பராசகேசரி வரவு கருதி ஒலிக்கும் ஒலி. நீ கேட்கும் முழக்கம் புலிக்கொடியினது' என்றனர். பிறகுதான் அவள், 'நல்லார் திருத்திவிட விடாய் தீர்ந்தாள்.'

(குலோத்துங்க: 141 - 178).

இராசராசனைக் கண்ட பெதும்பை, 'வலம்புரி ஆயிரம் சுற்றும் சலஞ்சலம்போலத் தோன்றுவாள்'; அன்ன நடையாள்; கிளியைப்போல் பேசுவாள்; இன்னிசை யாழ்வாசிக்கப் பாடுவாள்; மஞ்ஞையுடன் ஆடுவாள்; விரிந்த முல்லை போன்ற நகையுடையவள்; 'பெருஞ் சோற்றுப் பேரணியாள்'; மின்னலைப் போன்ற மகளிர்திரள் தன்னை அனைத்தும்படியான எழிலையுடைய

வள்; கூந்தலை முடிப்பதால் சோழனது கிரீடத்தை அணிவதற்கு ஏற்றவள்; இலங்கையில் கிடைக்கும் தெய்வத்தன்மையையுடையதும் ஒளி பொருந்தியது மான மணியைத் தன் விளையாட்டுப்பாவை பூணும்படி கட்டளையிடுவாள். காமன் பெருநோன்பு கைவந்த தென்று இவள் எதிரே குறுகினன்.

(இராசராச: 132 - 173).

## மங்கை

மங்கைப் பருவ வருணனை இது. மங்கை யானவள் தன் பெதும்பைப் பருவத்தில் கண்ட விக்கிரமனை மனத்தில் வரைந்தாள்; தன் கையினால் எழுதிய சோழனுடைய படத்தைப் பகலில் பார்த் துப் பார்த்து உவகைகொண்டாள்; சயதுங்கன் வீதியில் வந்தபோது, 'மணியணிகள் யாவும் தருக' என்று வாங்கித் தரித்தாள்; மலர்ந்த மாலை சூடினாள்; பொன்னாடை உடுத்தினாள்; சந்தனக் குழம்பை மார்பில் சாத்தினாள்; முத்துக்களால் செய்யப்பட்ட வளையை அணிந்த அவள் தோள்கள் விளங்க, முன் பருவங்களில் இல்லாத புதிய அழகு வந்து சேர, பவனி காணவந்த அவள், 'முன்னை வடிவும் இழந்தேன், முகநோக்கி என்னை அறியலன் என் செய்கேன்?' என்று கலங்கி விக்கிரமனை வணங்கினாள். சோழனின் மேனியை மனத்தின்கண் கொண்டு, 'மனமும் உயிரும் களிப்பளவிற் கொண்டு பெயர்ந்தது கொல் யானை' என்று நினைத்துக் கிழியில் தான் வரைந்த அவனது சித்திரத்தைக் கண்டு மகிழ்வாள்.

(விக்கிரம: 163 - 192).

குலோத்துங்கனைக் கண்ட மங்கை சோழன்மீது வேட்கை வரவர ஆற்ற முடியாத தன்மையை அடைந் தாள். நீரர மகளாகவும் வனதேவதையாகவும் வரையர மகளாகவும் விளங்கினாள். 'கொத்தின் அணங்கனைய கோலத்தாள்', 'கச்சை நிலமகள்போற் காட்சியாள்',

'வரகமலை யன்ன வனப்பாள்'. மைம்முகில் வண்ணத்துச் சோழன் வருதலைக் கண்டு தலைவனுடைய நிறத்திற்கு ஏற்ற வாறு மங்கை, 'நீலமே வேய்ந்துடுக்க, நீலமே பூண்டுடுக்க, நீலமே யன்றி நினையாதாள்.' பிறகு கொஞ்சுவாள் மருங்கில் உள்ளோரிடம். உள்ளோர் யார்? கிளி முதலிய பிராணிகளே. 'ஏ கிளியே! ஆத்தி மாலை தருவேன். என் நாயகனைச் சென்று கேளாய். வண்டே! தாது கடிகமழ் தாதகித் தாமத்தின், போதுகொழுதப் புறப்படுவாய்' என்று பலவாறு, 'கொள்ளைகொள் காமன் கொடும் பகைக்குக் கூசித்தன் பிள்ளைக ளோடிருந்து பேசுவாள்.'
(குலோத்துங்க: 178 - 201).

இராசராசனைக் கண்ட மங்கை முத்துக்களை இரு வரிசைகளாகக் கொண்டு அலங்கரித்துக்கொண்டவள்; மேருமலையிற் பிறந்த சலஞ்சலமென்ற சங்கு ஈன்ற முத்துப்போன்றவள்; புவி முழுவதும் விலையாகத் தரக் கூடிய மன்னன் அபிடேக மாணிக்கம். திருமகளையும் சிதையையும் ஒப்பாள்; ஆண் அன்னத்தின் குரலென்று ஐயுறும்படியாக ஒலிக்கும் சிலம்புகளை அணிந்தவள். வெண்மையானதும் சிவந்த நிறத்தை உடையதுமான ஆடைகளைத் தரித்தவள்; அரைப்பட்டிகை இடுப்பிலும் உதரபந்தம் வயிற்றிலும் அணிந்திருந்தாள்; நவரத்தினத் தோள்வளையாள்; மகர குண்டலம் அணிந்தவள்; சோழன் புலிக்கொடி நீட்டப்பட்ட மேருவின் வாடை தென்றலைக் காட்டிலும் இனிமை வாய்ந்தது. கார்பாடும் வானம்பாடி இறைவன் புகழ்பாடும் புள்ளாயிற்று. ஏழிலைப் பாலையின் மான்மதம்போன்ற நாற்றமுடைத்து அயிராபதத்தின் மதம் என்று பலவாறு சோழனைப் புகழ்ந்து தேற்றிக்கொள்வாள்; எல்லாப் பருவங்களிலும் உண்டான மலர்களை ஒரே பருவத்தில் ஏந்திய மங்கையின் தன்மைக்குப் பரிசாகச் சோழன் மங்கையின் வடிவத்தைத் தன் உள்ளத்தால் கவர்ந்தானம்!

(இராசராச: 174 - 190).

## மடந்தை

விக்கிரமனைக் கண்ட மடந்தை ஏழு கடல்களும் ஒன்ருகக் கூடி இப்புவியை அழித்து யுகத்தின் முடிவைச் செய்யும்படியான சக்தி வாய்ந்த விழிகளை உடையவள்; தேன்பாகைப் போன்ற சொல்லை யுடையவள்; அவள் சேடியருடன் பந்தாடும்போது பந்துகள் அவளைச் சூழ அவைகளுக்கு நடுவில் இம் மடந்தை பாற்கடலில் விளங்கும் திருமகளைப்போல் தோன்றுவாள்; விளையாடுவதனால் அவள் சிவந்த கைகள் இன்னும் சிவக்கும்; கொடியைப் போன்ற அவள் இடையில் முன்னிருந்த தன்மை கெடும்; இதுவரை ஓசையின்றியிருந்த மேகலைகள் ஒலிப்பதால் எழும் மெல்லிய குரலுக்கு ஏற்றவாறு சிலம்புகள் பதைக்க அருகே சென்று சோழனின் மாலையை விரும்பிக் கேட்பாள்; ஆனால், 'செங்கோற் றியாக சமுத்திர நண்ணுதலும்', தன், 'தோள்வளையும் கட்டிய மேகலையும் நழுவ' நடுக்கமுற்ருள்; நாண் முதலிய குணங்கள் நீங்கத் தமியளானுள்; பக்கத்திலிருப்போர் தோள்மீது சாய்ந்தாள். பாவையர் கூசிச் சந்தனமும் பனிநீரும் குழைத்துப் பூசி ஆடையினுல் வீசினர்கள். உயிரையும் உள்ளத்தையும் உடன்கொண்டு வள்ளல்பின் ஓதை மறுகில் உடன்போன மடந்தை நடுவே பிழைத்தொழிந்தாள்.

(விக்கிரம: 198 - 227).

குலோத்துங்கனைச் சந்தித்த மடந்தையைப் பார்ப்போம்.

இம் மடந்தை உருவாலும் திருவாலும் நலத்தாலும் குலத்தாலும் உலகிற் கூறும் பெருமைக்கு அர மகளிர் தொழத்தக்க இந்திராணியைப் போன்றவள்; முத்தாற் செய்த தலைக்கோலமும் கழுத்தில் முத்தாற் செய்த கட்டுவடமும் முத்தாற் செய்த சூழ்தொடியும் கச்சும் மேகலையுடன் காட்சி அளிக்கின்றவள். அதற்கு ஏற்ருற்போல் சோழேசனும் ஆறு கொடிகளையுடைய

சமந்தகமென்னும் தெய்வமணியின் ஒளி கேயூரத்துடன் ஒளிக்க, அகன்ற மார்பில் கவுத்துப மணியின் ஒளி வீச, அனந்தபணு மௌலிமணி ஆயிரம் மாறுபட்டு ஏகபணுமவுலியான தொல்லணிக்கு நாணமுற, வந்தனன். ஆய வெள்ளமும் அரச வெள்ளமும் இருபாலும் வந்து தலைவியை வணங்கின. அபயன் நகை புரிந்ததாகக் கருதி மடந்தை அவன் நகையையும் தோள்களையும் வணங்கினுள். மெய்ப்பாட்டில் கருணையென்ற மெய்ப்பாடு தோன்ற அழுதாள். துணைவியர் தோள்மீது சாய்ந்தாள். தனது நாயகனைக் கருதிய சோழனின் மாலையை உள்ளத்தின்கண் கொண்டு மயங்கிச் சோர்ந்தாள்.

(குலோத்துங்க: 228 - 241).

இராசராசனைக் கண்ட மடந்தை, 'ஈரடியான் மூவுலகுங் கொண்டானை யெப்பிறப்பும், ஓரடியு நீங்காதாள் ஓரணங்கு'; மானும் கலையும் வரைவுடன் வளர்ந்த மங்கை; மகரமீன் காதணிகளை அணிந்தவள்; கயல்களைப்போன்ற விழிகளை யுடையவள்; இருள் தோற்கும்படியான ஒளியையுடைய சூடிகையை அணிந்தவள்; பாப்புச் சுருளையுடைய தோளாள்; சோழனைக் கண்டதும் சுண்ணப்பொடிகள் வீசி நறுநீர் தெளிப்பாள். 'பொன்னிக்குங் கோதா விரிக்கும் பொருநைக்கும், கன்னிக்குங் கங்கைக்குங் காவல'னின் அயிராபதத்தைக் கண்டவுடன் சகோடயாழைக் கொண்டு புகழைப் பாடத் தொடங்குவாள். சுவர்க்கத்திலுள்ள கற்பகம் முதலிய ஐந்துவகை அலர்களைச் சோழனுக்குச் சாற்றினுள். மேகலையும் தோள்வளையும் சிறப்புப் பெற்றுள்.

(இராசராச: 216 - 274).

## அரிவை

விக்கிரமனைக் கண்ட அரிவையைப் பார்ப்போம். இவள் மடந்தைப் பருவத்தைக் கடந்து நின்றவள். தான்

கட்டிய பட்டும் துகிலும் மறையும்படி பச்சை யொளியைப் பரவச் செய்யும் மரகதத்தால் பொருத்தப் பட்ட மேகலை அணிந்தவள்; அழகிய பரந்த மார்பினை யுடையவள்; நடையால் அன்னத்தை ஒப்பாள்; கழுநீர் போன்ற கண்களையுடையவள்; பக்கம் சுருண்டு எண்ணெய் பூசப்பட்ட கூந்தலில் மாந்தளிரைச் சூடியவள். சீதேவி என்ற அணியை அணிந்தவள். வண்டு களுக்கு விருந்தளிக்கும் மலர்களைச் சூடிய நீலமணி போன்ற கூந்தலையுடையவள். சோழனைக் கண்டதும் மார்பும் தோளும் பணைத்தாள். தன்னைத் தவிர வேறு மகளிர் வீரனுக்குக் கிடையாதெனச் சாதித்தாள். வாரா விருப்பு வருவித்தாள்.

(விக்கிரம: 228 - 262).

குலோத்துங்கனைக் கண்ட அரிவை அரவிந்தச் சாதி தலை வணங்கும்படியான தன்மையையுடையவள்; மங்கலம் பாடி விறலியர் வந்து, 'வளவர்பெருமான் பவனி வரும் நாளை'க் கூற அதைக் கேட்டு இன்புற்றாள்; இவ் விரவு பேரிரவின் அளவையுடைத்து என்று வெறுப்புற் றாள்; 'விடியும்வரை சுடும்போலிருக்கின்றது. என்று விடி யுங்கொல்?' என்று ஏங்கினாள்; சந்திரகாந்தச் சிலையாற் செய்த நிலாமுற்றத்தில் நடந்து போந்தாள்; பவனி முரசொலியைக் கேட்டதும் வேர்வை கழுத்தில் தங்க, முத்துக்களும் சங்கும் சேர்ந்த காட்சியை ஒத்தாள்! மாணிக்கத்தொடி கையினின்று சொரி கின்றபோது மாணிக்கச் செம்பொற்றொடி வழங்கும் பதுமநிதியை ஒத்தாள்; சொரிதளிர் மாங்கொம்ப ரென்ன வருவாள். பூங்கொம்பரென்னப் புறங்கொடுத் தாள்.

இவள் நிலைமையைக் கண்டு அவள் அருகில் நின்ற பாவையர், 'கொற்றவை சோழன் உடைவாளில் வீற் றிருப்பதால் மறு பக்கம் இவள் வீற்றிருக்க இட மில்லையே! தரணியாள் வீற்றிருக்கும் சோழனது

தோளுக்கு எதிரான ஆரத் திருத்தோளில் இடம் இல்லையே! நேரொத்த பூந்தா மரையாள் எதிரேயிப் பொற்றொடிக்கும் எந்தார மார்பம் 'இசைந்திலன்' என்று பலவாறு கூறினர். 'அன்னங்காள்! கபோதங் காள்! நறிய நுதலையுடைய பாவைகாள்! பூவைகாள்! மதுகரங்காள்! சோழனிடம் எம் அரிவையின் பொருட்டுத் தூது செல்லுங்கள்!' என்று கெஞ்ச லாயினர்.

(குலோத்துங்க: 263 - 299).

இராசராசனைக் கண்டு அவனிடம் முறையிட்ட அரிவையைப் புலவர் வருணிப்பதைத் தெரிந்துகொள் வோம்: இவ்வரிவை படுசுடர்ச் செம்பொற் படியாள். முத்தின் படி அணிந்தவள். கமலம் போன்ற வதனம் உடையவள். நீரில் பாங்கியருடன் நீராடுகையில் சோழனைக் கண்டதும் கலையும் மேகலையும் தாமா கவே நீங்க, மற்றவர்கள் அவளுடைய அலங்கரிக்கப் படாத இயற்கையழகு திருஷ்டிப்படாமல் இருக்க, விரைந்து சென்று பொன்னுபரணங்களால் அவள் மேனியை மறைத்தனர். 'தொன்மையான புவியைக் காக்கும் முதுதண்டம் என்ற ஆயுதம் மன்மதன் வில்லாகிய கரும்பின் சாற்றைக் கொள்ளாதோ? தடாகத்தில் கஜேந்திரனைத் துன்புறுத்திய முதலை யைக் கொன்ற சக்கரம், மன்மதனுடைய சுறு மீன் கொடியை எறியாதோ? குன்றுத என் காமமயக்கம் தணியும்படி என்னை ஏற்றுக்கொள் வாய்!' என்று அரிவை சோழனிடம் முறையிடுகிறாள். இவள் முறையீட்டைக் கேட்ட சோழன், 'தெய்வப் புவனி விலையாய பொற்றுகிற் கெல்லாம், அவனி முழு வதும் அளித்தான்'. தவிர அடிமுதல் முடிவரை அணிகள் அளித்தான். இதைக் கண்ட பாணரும் விறலியரும் பாடியும் குழலூதியும் பாம்பின் படக் கூத்து ஆடினர். (இராசராச: 275 - 347).

## தெரிவை

விக்கிரமனைக் கண்ட தெரிவை தளிரை ஈனுகின்ற, மலர்கள் வாடாத பொன்கொம்பு போன்றவள்; ஓவியர்களும் வரைய முடியாத எழிலையுடையவள்; தோகை பொலியும் மஞ்ஞை போன்றவள். பொருளால் வருந்தக் கிடையாத மாணிக்கம். யார்க்கும் அருந்தத் தெவிட்டாத அமுதம். யாழுடன் பாடும் பாணனின் இசையைக் கேட்டதும் இசையினாலோ அன்றி மன்மதன் அன்பின் காரணத்தாலோ மயங்கி வீழ்ந்தாள். ஊரெல்லாம் காக்கும் உடுக்கையை, மன்மதன் அடிக்கும் பறை என்றாள். வெண்ணிலாவின் குளிர்ச்சியை வெயிலென்றாள். கோழிக்கோவின் செங்கோலைக் கொடுங்கோலென்றாள். இவ்வாறு இரவு முடிந்து பொழுது புலரும்வரைக்கும் புலம்பினாள். கடாயானையைக் கண்டதும் புலம்பினாள். விடை மணியோசையைக் கேட்டு அகத்தின்கண் தைரியம் கொண்டு மகிழ்வுற்றாள். 'பனித்திவலை என் உயிரை வாட்ட, வீசு மதத்திவலை யான்மீட்டேன்' என்றாள். 'மேகங்கள் தவழ, கடல்கள் ஒலிக்க, எனக்கு ஏற்பட்ட துயரைக் களிறுகளின் முழக்கத்தைக் கேட்டு நீக்கினேன். மன்மதனால் ஏற்பட்ட துன்பத்தைச் சோழன் வரவால் நீக்கினேன்' என்று மனத்தை ஆற்றிக்கொண்டாளாம்.

(விக்கிரம: 228 - 299).

குலோத்துங்கனை வீதியில் சந்தித்த தெரிவை சூதாடுவாள். பாடற் பாணருடனும் ஆடற் கோடியருடனும் பந்தாடுகின்றாள். அணி, ஆடை முதலியவைகளைப் பல மாதர் ஏந்தி நிற்ப, மும்முரசு முழங்குதலைக் கேட்டதும் ஒரு பெண் ஏந்தின துகிலை வாங்கி உடுத்தாளோ இல்லையோ என்று கண்டார் கூறப்படி விரைவுடன் மண்டபத்தை விட்டு மறுகிலே புகுந்தொழிந்தாள். சோழன் அயிராபதத்தின்மீது வருவதைக் கண்ட தெரிவை காம மிகுதியினால் மயக்கமடைய

அவளைத் தாயர் மலரால் செய்த அணைமேல் இட்டனர். 'கொய்யாத கற்பகப் பூமாலை கொண்டைக்கும், நெய் யாத பொன்னாற் செய்த துகில் துடைக்கும் பாப்புச் சுருள் தோளிற்கும் காவிரியாற்றின் அகிலும் சந்தன மும் கலந்த குழம்பு மார்பிற்கும் வல்லத்தில் செய்த பனைக்குறுத்துத்தோடு காதிற்கும் சோழேசன் அளிக்க யாங்கள் வழிபாடு கூறிக்கொண்டு வந்தோம்' என்று பாணரும் சேடியரும் தெரிவிக்கத் தெரிவை சிறிது தெளிந்து எழுந்தாள்.

இராசராசனைக் கண்ட தெரிவையைப்பற்றிக் கூத்தர் கூறியது கிடைக்கவில்லை. ஒருகால் அச்சுவடி கள் அழிந்துபோயிருக்கலாம். அல்லது புலவர்கள் கண்ணில் படாமல் எவரிடமேனும் இருக்கலாம். தமிழ் அன்பர்கள் இதனைக் கவனிப்பாராக.

## பேரிளம்பெண்

கூத்தரால் வருணிக்கப்பட்ட எழுவகை மாதர் களுள் இறுதி வகையைச் சார்ந்தவள் பேரிளம்பெண்.

விக்கிரமனைக் கண்ட பேரிளம்பெண், 'கொற்கை யர்கோன் மல்யானைக் கைபோலத் திரண்ட துடை களையும், விரிந்த மார்பினையும் உடையாள்'; தன் எழிலுக்குத் தோல்வியுறுத திருமகளின் இடத்தைக் கைக்கொள்வதுபோல் தாமரைப் பூவைப் பறிப்பாள்; தேன் துளிக்கும் மாலையும் கஸ்தூரிக் குழம் பும் முத்துமாலைகளும் அணிவாள்; மருண்ட பார்வையால் மானையும் சாயலால் மஞ்ஞையையும் ஒப் பாள்; இளம்பனையின் உச்சியில் உண்டாகும் கடுப்பையுடைய மதுவை மடலில் வார்த்து நகத் தால் தெறித்துச் சோர்ந்து விழுவாள்; மயக் கம் காரணமாகப் பல கனவுகளைக் காண்பாள்; துயில் நீங்கியபோது, கள்ளுண்ட மகிழ்ச்சியினால்

மேகலையையுடைய ஆடை நீங்க, சூடிய மாலை நீங்க, சந்தனத்தால் செய்த அலங்காரம் சிதைய, சிவந்த வாய் வெண்மையாக மாறக் கருகிய கண்கள் சிவக்க, நுதலில் வேர்வை சொட்ட, இவ்வாறு கண்டு மகிழ்ந்த கனவை நனவாகக்கொண்டு பலருடன் குலாவத் தான் அடைந்த மகிழ்ச்சி பொய்யாகும்படி சயதுங்கன் நாமக் கடாக்களிறு நண்ணுதலும், 'சோழனைக் கண்டவுடன் கெட்டேன்; நனவாயிற்று' என்றனள். அவள் மயக்க மடைந்து தோழியர் தோள்கள்மீது சாய, அவர்கள் சோழனிடம் ஓடி, 'கோமானே, பேரிளம் பெண்ணினிட மிருந்து கொங்கைக் கொழுஞ் சுணங்கும் தண்டா நிறையுந் தளிர் நிறமும் கொண்டாய். குன்றேயெனத் தகுநின் கோபுரத்திற் றாங்குமணி ஒன்றே யுலகுக் கொழியுமே' என்றலும், 'குத்துங் கடாக்களிற்றுப் போந்தான் கொடைச் சென்னி உத்துங்க துங்கனுலா.' (விக்கிரம: 306 - 342).

இனிக் குலோத்துங்கனைக் கண்ட பேரிளம்பெண்ணைப்பற்றி அறிவோம்.

உலகப் பெண்தன்மைக்கு ஒப்பில்லாள் ஒருத்தி என்று கூறும் திருமகள் என்னும் பெண் தன் தன்மையை உணர்ந்து கமலத்தில் வீற்றிருந்து யாது பயன் என்று வெறுப்புற்று வாழும்படியான எழிலையுடையவள் பேரிளம்பெண். தென்னம் பாளைக் கள்ளை வயிர மடலொன்றில் வாங்கி அருந்தாது, நகத்தால் தெறித்து வண்டுகளை ஓட்டிய மதுவைத் தனி முகமன் கூறிக் கொடுக்க வாங்கி அருந்தி, மதுமயக்கத்தினால் மொழி குழறிக் குயிற்கும் கிளிக்கும் கற்கவேண்டு மென்ற விருப்பத்தினை விளைவித்து வேர்வையாலே நுதலை அலங்கரித்தவள். காலும் கையும் மரகத மாணிக்கங்களால் ஒளிபட, குமுத மலர் புருவ நடுவே தாழ, கருவிளம்பூப் போன்ற கண்கள் மலர, கழுத்துக்கும் கண்களுக்கும் நடுவில் முருக்கிதழ் போன்ற அதரம்

மலர, பெருந் தெங்கிளநீர் தாழ்ந்து பிறங்க, இளமூங்கில் போன்ற தோள்கள் விளங்க, அன்னமும் மானும் மயூரத்திரளும் தொடர்ச் சோழனைக் காணச் சென்றாள். சோழனைக் கண்டதும் கண்ணும் உள்ளமும் களிப்ப, 'மலைகளில் சென்று விசய மடந்தையர்போல் தவஞ்செய்யேன்; திருவின் செல்வி போல் ஏழுகடலுஞ் சென்று நீராடேன்; நின் மாலை எனக்கு வாய்த்தால் யான் எதற்கும் சம்மதிக்க மாட்டேன். பதினெண் மலையரசனை சேரனின் கொடியில் விளங்கும் வில்லை முறித்துவிட்டாய்; ஆனால் என்னை வருத்தும் மாரன் சிலையைத் தாழ்விக்கச் செய்ய வில்லை. பாண்டியனை வென்றாய்; எம்மை வருத்தும் காமக்கடலை மாய்த்தருள மறக்கின்றாய். இதற்குக் காரணம் யாதோ? சிங்கள தேசத்துச் சிவந்த செம்மணியின் சிவந்த சோதியைக் கொண்டு கண்டோர் உயிருண்டலை மாற்றினாய்; செக்கரிடத்து வெஞ்சோதி எம்மைக் கொலைசெய்தால் நீ விலக்காததன் காரணம் யாதோ? போர்க்களத்திலே பல்லவர் கொடியில் விளங்கும் விடையை வென்றாய்; எம்மை வினை செய்கின்ற வீதிவிடையை ஒடுக்காததன் காரணம் என்னவோ? மைக்கோல வண்ணா, வளர்ந்த மகராலயம் மறந்த கண்ணா, அநங்கன் போர் காவாயேல் மண்ணுலகில் மங்கையர் எப்படித்தான் ஆவிபுரந்து இவ்வினைக்கு ஈடேறுவார்?' என்று சோழனின் கொடுமையை நினைந்து புலம்பினாள். பிறகு தையலார், பொற்றோகைச் சாயலார், கையகலா மையலார் ஊர்ப் பொதுவிடத்திற்குச் சென்றார்கள். பெருகுடையா நீரேழும் பாரேழும் பேணும், ஒருகுடை யான் போந்தான் உலா.

(குலோத்துங்க: 341 - 385).

இராசராசனைக் கண்ட பேரிளம்பெண் சிவந்த சந்தனம் கமழும் தோள்களைப் போன்ற திருமகளை ஒத்தவள்; பாம்பைப் போன்ற வாகுவலயத்தைக் கட்டிய

தோளாள்; பாற்கடல் போன்ற வதனம்; சுறவுக் கொடியோனை நோக்குவாள்; நுதலில் வேர்வை உதிரத் துகில் நழுவக் கூந்தலாகிய மேகம் அவிழ்ந்து இடைக்குத் துன்பம் தர அகிலமும் சேனையும் மன்னருந் தெய்வப் பெருமாளும் யானையும் நிற்க எதிர்நின்று நோக்கிப் பரத்தையர் கூறுவர். 'உதயத்தைப் போன்ற ஒளியினையுடையவனே! உன் தோள்களைப் பேரிளம்பெண் நீங்காள். கொற்றவை தான் வீற்றிருக்கும் உன் தோள் களை வேறொருவருக்கு ஈயாத பெருமையுடையவள். கலைமகள் உன் கண்களில் குடியிருப்பாள். பூமிதேவி மகளிர்க்குத் தனித்தனியே உரிய உறுப்புகளை உடைய வள். முடிவடையாத இரவு வருகின்றது. நீ கருணை அருளினால் வேட்கை தீர்ப்போம். 'பள்ளியறை பாற் கடலே பண்டு திருத்துயில்கூர், பள்ளி யறையின்று பாசறையே', 'மாணிக்கக் கொத்துக்குடையவனே முத்து மாலைக்குடையவனே, கருணை காட்டுவாய்.'

பேரிளம் பெண் காமமயக்கமடைந்து பரத்தையர் தோள்கள்மீது சாய்ந்தாள். 'இலகுடையான் கொற்றக் குடைநிழற்றும் ஈரேழ் உலகுடையான் போந்தா னுலா.'

(இராசராச: 350 - 391).

இந்த எழுவகை மாதர்களின் வருணனையிலிருந்து விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் இவர்கள் ஆட்சி புரிந்த சுமார் ஐம்பத்தாறு வருஷங்களில் கலை யிலும் நாகரிகத்திலும் விசேஷமாக அதிக மாறுபாடு கள் உண்டாகவில்லை என்பதைக் கூத்தரின் வாக்கால் அறிகின்றோம். அக்காலத்து மகளிர் அணியும் அணிகளை இவர் மிகவும் விரிவாகக் கூறியுள்ளார். உத்தம இலக் கணத்தின் உள்ளருத்தத்தை மிகவும் அழகாகக் குறிப் பிட்டுள்ளார். மகளிர் அந்த அந்தப் பருவத்திற்கு ஏற்றாற் போல் வெவ்வேறு விளையாட்டுக்களை - பந்தாட்டம், நீர் விளையாட்டு, சூதாட்டம், மதுவாட்டம் - ஆடுகின்றனர்

என்பது தெரிகின்றது. சோழனிடம் மாதர்களின் முறையீட்டினால் அவர்களுக்கு ஏற்படும் காமவுணர்ச்சியும் வேட்கையும் காமவேட்கை மிகுதியால் நேரிடும் பரிதாப நிலையும் புலப்படுகின்றன. ஒவ்வொரு பருவத்து மகளிரையும் மிகவும் நுட்பமாகச் சித்திரித்துள்ளார் கூத்தர். எடுத்துக்கொண்ட வேலை மிகக் கடினமானது என்பது அவர் இயற்றிய செய்யுட்களினால் நன்கு விளங்குகின்றது. மகளிர் விளையாட்டுக்களை ஆராய்வோம்.

## பந்தாட்டம்

**வி**க்கிரமசோழன் உலாவிலும் குலோத்துங்க சோழன் உலாவிலும் மகளிர் பந்தாடுதலை மிக்க எழிலுடன் வருணித்துள்ளார் கூத்தர். தேன்பாகைப் போன்ற சொற்களையுடைய மடந்தை தன் தோழியைத் தழுவிக்கொண்டு நிலாமுற்றத்திற்குச் சென்று, 'வல்லி, நாம் சேடியர்களை இரண்டு திறத்திலும் சமமாகப் பிரித்துக்கொண்டு விளையாடுவோம். நீ வென்றால் என் மாலையை நீ கொள்; நான் வென்றால் கொள்வது எங்கோமான்தன் மாலை; அதனை வாங்கித் தருக' என்று கூறினாள். அதன் பின் சபதம் செய்து தனது கூந்தலையும் மேலாடையையும் இறுகக் கட்டிக்கொண்டு பந்து விளையாடத் தயாரானாள் மடந்தை. தான் ஒருத்தியாகவே இரண்டு வகையாருடைய பந்துகளையும் ஏந்திக் கொண்டாள். முத்துக்கள் பதித்த அப்பந்துகள் அவளைச் சூழ்ந்தும் கீழே வீழ்ந்தும் மேலே எழுந்தும் நெருங்க, மடந்தை பாற்கடலுக்கு நடுவில் திகழும் திருமகள்போல் காட்சியளித்தாள். அவள் பந்துகளைக் கைகளினால் தரையில் அடிப்பதால் செங்காந்தள் அங்கை சிவக்கும்; தோள்வளைகள் ஒலிக்கும்; கலாபங்கள் அசையும்; கொடியைப் போன்ற இடையின் முன்னிருந்த தன்மை கெடும்; மேகலைகளும் சிலம்பும் ஒலிக்கும்; மடந்தை பந்தாடி வெற்றியடைந்து பருதி

அகளங்கன் சந்தாடு தோள்மாலை தாவென்று மகிழ்வுடன் கூறுவாள். (விக்கிரம: 198 - 209).

குலோத்துங்கசோழன் உலாவில் அரிவை பந்தாடும் வருணனை மிக்க எழிலையுடைத்து. 'சூதாடேம், பந்தாடுதும் நாம்' என்று சேடியர் கூற அரிவை பந்தைக் கொண்டுவரும்படி கூறுவாள். 'தம்முடனே அருகிருந்த பாணருங் கோடியரும், கண்டார் எவருங் கடுகினர்.' பல பந்துகளை ஒன்றாகச் சேர்த்து அரிவை ஆடலானாள். உயர மலர்ந்த கமலம் இரண்டிலும் தாழ மலர்ந்த தாமரை யிரண்டிலும் அன்னங்கள் ஒழுங்காகப் படியும் தன்மைபோல அரிவை கையெல்லையும் காலெல்லையும் கடவாமல் ஆடத் தொடங்கினாள். தழைய முடிந்த கழுநீர்ப்பூந்தொடை இடையிடையே கால்போலத் தூங்க, பவுரியிற் சுழலும் கூந்தல் பந்தரையொப்ப, குழலெல்லையுஞ் சென்ற முத்தின் அம்மனையும் பந்தும் பந்தர்க்கு இடையே முத்தின் கால் கொடுத்ததையொப்பக் கலந்து தோன்ற, விடுத்த பந்து அடைய விழுந்தனவாம். என்ன அழகிய வருணனை! இவ்வரிய காட்சியைப் பாணர் போற்ற, ஆடற் பொருநர், கொழுவிய தளிராலே அரிதாகச் செய்த கையோ பதயுகமோ கண்ணோ தம்மில் விரைந்தவை இன்னவென்று தெரியாது அயிர்த்தனர்.

(குலோத்துங்க: 302 - 313).

பந்தாடும்போது பாணரும் போற்றியதாகக் கூறப் பட்டதால், பாணரும் இசையுடன் விளங்கினர் என்று அறிகின்றோம். முத்துக்கள் பதித்த பந்துகள் விளையாட்டில் ஈடுபட்டன என்பது தெரிகிறது. பந்தாடும்போது மகளிர் இரு கட்சியாகத் தங்களைப் பிரித்துக்கொண்டு விளையாடுவார்களாம். அவர்கள் ஆபரணங்கள் ஒலிப்பதாலும் கூந்தல் அவிழ்வதாலும் மாதர்கள் தங்களையே மறந்து மகிழ்ச்சியுடன் விளையாடுவரென்பது புலப்படுகின்றது.

மாதர் விளையாடும் மற்ருெரு விளையாட்டைப் புலவர் வருணிக்கிருர். அது நீர்விளையாட்டாகும்.

## நீர்விளையாட்டு

அரிவை, 'அண்ணல் வருமளவும் குளிர்ந்த கழுநீர்த் தடப்பொய்கையில் ஆடுவோம்' என்று கூறிச் சேடியருடன் கிளம்பித் தடாகம் நீர் குறையும்படி படியவே, வாவியிலுள்ள வரால்களும் சேல்களும் தாவி விழுந்து தடுமாறினவாம். மகளிரையும் தங்கள் இனத்தவர் என்று கருதின போலும்! அந்த ஆச்சரியத்திஞல் தடுமாறின போலும்! நீரில் விளையாடினதால் நங்கையின் செவ்வாயும் செவிகளும் செயிர்த்தன. நீர் உறைந்ததஞல் அவள் கண்கள், 'வள்ளப் பசுந்தேன் வடிய வருஞ்சிவப்பு' நிறத்தை அடைந்தனவாம். அரிவையின் பேரழகு வருணிக்க முடியாத தன்மையுடன் விளங்கியதால் திருஷ்டி தோஷத்தை நீக்கச் சேடியர் பொன்னுபரணங்களை விரைவில் கொணர்ந்து அவள் இயற்கையழகை மறைத்தார்களாம். என்ன வருணனை! என்ன கற்பனை!

(இராசராசன்: 280 - 290).

# 10

# பிற செய்திகள்

## ஆபரணங்கள்

சோழர்கள் காலத்தில் மகளிர் மிக விலையுயர்ந்த அணிகளை அணிந்துவந்தார்கள். நவரத்தினங்கள் பதித்ததும் சிங்கள தேசத்து மாணிக்கங்கள் சேர்க்கப்பட்டதும் முத்துக்கள் பதித்ததுமான அணிகளை அணிந்து வந்தனர். சுவாமி விபுலானந்தர் தமிழ்ப்பொழில் சஞ்சிகையில் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட பேரியாழைச் சித்திர ரூபமாகக் காட்டியுள்ளார். அந்த யாழை வாசிக்கும் மகளிரிடத்தில் காணப்படும் அணிகள் பண்டைக்காலத்தில் வழங்கி வந்தவைகளாகும். மேகலை, சிலம்பு, சூடகம், பட்டிகை, காறை முதலிய அணிகளை அச்சித்திரத்தில் காணலாம். அவ்வணிகள் சோழர் காலத்தில் வழங்கி வந்தன என்று மூவருலாக் கூறுகின்றது. விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் காலங்களில் ஆபரணங்களில் அதிக மாறுதல்கள் ஏற்படவில்லை என்பது இம் மூன்று உலாக்களினாலும் தெரிகின்றது. மாதர்கள் பருவத்திற்கு ஏற்றாற்போல் அணிகள் அணிந்து வந்தனர் என்பதைக் கூத்தரின் எழுவகை மகளிரின் வருணனையிலிருந்து அறிகின்றோம்.

—சோணர்ந்தணிந்த
சூடா மணியும் பணிவளையுஞ் சூடகமும்
கோடா மணிமகர குண்டலமும்—ஆடிய
சச்சையும் மாலையும் ஆரமும் தாமமும்
கச்சையும் மேகலையும் காஞ்சியும்—பச்சென்ற

**பட்டும் துறங்கணியும் பட்டிகையும் நூபுரமும்
கட்டும் கனவயிரக் காறையும்''**

(இராசராச: 321 - 324).

மேற்கூறிய அடிகளால் பலவகை ஆபரணங்கள் அக்காலத்தில் வழங்கி வந்தது தெரிகிறது.

## யானைகள்

இம் மூவருலாவில் கூத்தர் யானையைப்பற்றி மிக்க விரிவாகக் கூறியுள்ளார். களிறுகளுக்குச் செய்யும் அலங்காரங்களையும் பவனி வரும்போது அவைகளின் காட்சியையும் சமர்புரிவதில் அவைகளின் வீரத்தையும் புகழ்ந்திருக்கிறார்.

அயிராபதம் என்ற மதயானை தந்தத்திலிடும் கோளகையைக் கொண்ட கோக்களிறு; 'தரணி கவர்ந்து வேந்தர் பாடும் பரணி புனைந்த பகடு'. 'வாடா மதுர யாழ்வாங்கி மடவரல், பாடா விருந்த பருவத்து, நீடாப் பரிசில் உடனே பணிப்பதுபோல்' களிறு குரிசிலுடன் வந்து கூடும். 'காலத் தகிருங் கடாக்களிறு' தானே முழங்கும். தனக்கெதிரே வானம் முழங்கினால் அதைத் தடவி மேகத்துக்கு மருப்பும் அடற்கையும் இன்மையறிந்து சினம் தணியுமாம். பகைவர் தப்பித்து ஓடமுடியாதபடி செய்யும் தீரம் மிகுந்தது அது. அதன் வெங்கால கோபம் மலைச்சிகரங்களைப் பொடியாக்கிவிடும். வேறு யானைகளின் மதத்தைப் பொறுக்காத சினத்தால் தன் மதத்தை அது ஆறுபோல் வெளிப்படுத்துமாம். திக்கு யானைகள் சுமந்த புவியைத் தானொருவன் அயிராபதத்தின்மீது அமர்ந்து தாங்கி அகளங்கன் அவற்றின் வருத்தத்தைத் தீர்த்தானும். அக்களிறு பகைவரது நாட்டை மிதித்துப் பகையரசர் உயிர்களைக் கூற்றுக்கு அளிக்கும்படியான பலத்தையுடையது.

யானை வீதியில் பவனி செல்கையில் அதன் முன் முரசுகள் அடித்துக்கொண்டு செல்லுவார்களாம்.

போர்க்களத்தில் ஈடுபடும் யானைகளைப்பற்றிக் கூறு கிறார் கூத்தர்: சோழர்கள் தங்கள் யானைகளால் பகைவர் களுடைய தடாகங்களைக் கலக்குவார்களாம். யானைகள் சினமிகுதியால் பகைவர்களுடைய மலைகளைத் தம் கோட் டால் குத்துமாம். மதவெறியைக் கொண்ட களிறுகள் விறலியர் வாசிக்கும் வீணையின் நாதத்திற்கு அடங்கு மாம்.

யானைகளில் வனசரம், கிரிசரம், நதிசரம் என்ற மூன்று வகைகள் உண்டு என்று கூத்தர் கூறுகிறார். வங்காளத்து யானை மிகச் சிறந்தது என்று புலவர் கூறு கிறார். வங்காளம் என்று கூறப்பட்டதால் அஸ்ஸாம் அருகில் காணும் யானைகளாகலாம். சோழர்கள் கங்கைவரைக்கும் படையெடுத்து வெற்றியுடன் திரும் பியதால் ஒருவேளை அத்தேசத்து யானைகளைத் தங்க ளுடன் கொண்டுவந்திருக்கலாம் என்று ஊகிக்க இது இடந்தருகின்றது.

## முரசுகள்

முரசுகள் மூன்று விதம் என்று கூறுகிறார் கூத் தர். 'தோன்றியகோன் விக்கிரம சோழன் தொடைத் தும்பை, மூன்று முரசு முகில்முழங்க', 'கோழி யும் வேங்கையும் முட்பணியுங் கோரமும்' (விக்கிரம: 28,272) என்ற அடிகளால் மூன்று வித முரசுகள் என்று தெரிகின்றன. அவைகள் முறையே வீரமுரசு, நியாய முரசு, தியாக முரசு. இவை இடியைப் போல் ஒலிக்கின்றனவாம். அந்த ஒலி கடல் ஒலி யைப்போல் இருந்ததாம். 'கவரி யிரட்டக் கடவுண் முரசார்த், துவரி யுவாவாடி ஒப்ப' (குலோத்துங்க: 85) என்ற அடி இதை விளக்கும். 'வலம்புரி ஊத வளைக்குலம் ஆர்ப்பச், சிலம்பு முரசஞ் சிலம்ப' (விக்கிரம: 66) என்ற அடியும் இதைப் புலப்படுத்து

கிறது. இம்முரசுகளுக்குத் தும்பைமாலை சூட்டு வார்களாம்.

## பாடப்பெற்ற தலைவர்கள்

சோணாட்டில் திகழ்ந்த பல வீரர்களைப்பற்றிப் புலவர் கூறியுள்ளார். இவ்வீரர்கள் சோழர்களிடம் சிறந்த தலைவர்களாக விளங்கி வந்தார்கள். சமர் புரிவதிலும் திருப்பணிகள் புரிவதிலும் இவர்கள் சிறந்த புகழைப் பெற்றவர்கள்.

விக்கிரமசோழன் காலத்தில் விளங்கிய சில தலைவர்களை அறிவோம். இவர்களில் முனையதரையன் என்ற முனையர்கோன் என்பவனும் வாணகோவரையன் என்பவனும் புகழ் பெற்றவர்கள்.

—"போர்க்குத்
தொடுக்குங் கமழ்தும்பை தூசினொடுஞ் சூடக்
கொடுக்கும் புகழ்முனையர் கோனும்"

(விக்கிரம: 71).

"தாங்கு மடமகளிர் தத்தங் குழைவாங்க
வாங்கு வரிசிலைக்கை வாணனும்"

(விக்கிரம: 77).

தக்கயாகப்பரணியில் திருச்சிற்றம்பலமுடையான் பெருமான் நம்பி என்ற ஒரு தலைவனைப்பற்றிக் கூறப் பட்டுள்ளது.

"வில்லவனைத் திறைகொண்ட வேற்றண்ட காபதியைப்
பல்லவனைப் பாடாதார் பசியனைய பசியினமே"

(தக்க: 236).

தண்டகாபதி என்றது தொண்டைநாட்டுக் குளத்தூர்க் குடிப்பிறந்த பல்லவராயனை, 'குளத்தூரு டையான் குளத்துளான் திருச்சிற்றம்பலமுடையான்

பெருமான் நம்பி.' இவன் இராசராசன் காலத்தில் பெரிய அதிகாரியாகவும் படைத்தலைவனாகவும் இருந்தான். குளத்தூரில் ஸ்ரீ இராசராசேசுவரமுடையார் கோவில் எழுப்பினான். இவன் வேளாண்மரபில் தோன்றியவனென்றும் சிறந்த கொடையாளியாக இருந்தானென்றும் சேரனை வென்றவனென்றும் தெரிகிறது.

தவிர இராசராசன் காலத்தில் திருமந்திர ஓலையாக இருந்தவன் இராசாசிரயப் பல்லவராயன் என்பவன்.

## கூத்தரும் பெண்களும்

மூன்று உலாக்களில் எழுவகை மகளிரை விவரிக்கையில் அவர்களுடைய எழில், உடை, குணங்களை மிக்க அழகுடன் வருணித்துள்ளார் கூத்தர்.

மகளிர் வெவ்வேறு வகை விளையாடல்களில் ஈடுபடுவார்கள். விளையாடும்போது பாட்டுப் பாடுவார்கள். தம்முடைய காதல் புறத்தாருக்குப் புலனாகாமல் மறைக்க முயல்வார்கள்.

பொதுமகளிர் சூதாடுவார்கள் என்று தெரிகிறது. குலோத்துங்கசோழன் உலாவில் தெரிவையை வருணிக்கையில் மகளிர், 'திருவுலாப் போதும் பெருமான் நம்மறுகு புகுதுமளவும் இவ்விடத்து யாதென்றுடனே பொழுது போக்காமல் இருக்கக் கடவேமோ?' என்று வினவத் தெரிவை, 'சூதாடேம்' என்று வினாவிற்கு உத்தரம் கொடுத்ததாகக் கூறுகிறார்.

சோணாட்டு மகளிர் உண்மையிலே நாட்டிற்கு அணிகலன்களாக விளங்கினர் என்று கூறலாம். அவர்கள் அணிந்த ஆபரணங்களினாலும் உடையினாலும்

விளையாடிய விளையாட்டுக்களினாலும் நாகரிகத் துறையில் அவர்களின் முன்னேற்றத்தை அறிய முடிகின்றது. அக்காலத்துக் கலாசாரம் விவரிக்க முடியாத தன்மையுடையது. அதன் மேன்மையைக் கூத்தரின் பொன்னடிகள் மிக்க எழிலுடன் நமக்கு அறிவிக்கின்றன. கூத்தரின் அடிகளில் குறிப்பிட்ட ஆடை, அணிகளை அக்காலத்தில் தீட்டிய ஓவியங்களில் இன்றுகூட நாம் காண்கின்றோம்.

# 11

# உலாக்களும் மற்றக் காவியங்களும்

கூத்தர் தமது மூவருலாவில் இராமாயணம், பாரதம் முதலிய காவியங்களில் அடங்கியுள்ள செய்திகளைத் தெரிவிக்கிறார். இதனால் அவருடைய ஆழ்ந்த ஆராய்ச்சியும் நுண்ணறிவும் வெளிப்படுகின்றன.

இராமன் மிதிலையில் வில்லை உடைத்த சம்பவத்தை, 'மாதை, ஒறுக்கும் மிதிலை யொருவில்லைத் தொல்லை, இறுக்கு மவனிவ னென்பார்' (குலோத்துங்க: 116), என்ற கண்ணியிற் காணலாம். இராமன் கடலின்மீது அம்பெய்த சம்பவத்தைப் பின்வரும் அடிகளால் குறிப்பிடுகிறார்.

—''முற்கோலி
வட்ட மகோததி வேவ வோருவாளி
விட்ட திருக்கோற்ற விற்காணீர்''

(இராசராச: 84),

—''மாதண்ட
முற்றக் கடல்கிடந்து வேவ முனிந்தின்னம்
கோற்றத் தனிவிற் குனியாதோ?''

(இராசராச: 310).

—''பொருது
சிலையால் வழிபடு தெண்டிரையைப் பண்டு
மலையால் வழிபட வைத்தோன்''

(இராசராச: 12)

—''தென்திசையில்
நீரதிரா வண்ணம் நெடுஞ்சிலையை நாணேறிந்த
வீரதரா வீரோ தயா''

(இராசராச: இறுதி வெண்பா).

என்ற கண்ணியில் இராவண சங்காரத்திற்குரிய காரியங்களைப்பற்றித் தன்னைச் சூழ்ந்து நிற்போரிடம் ஆலோசிக்கையில் கடல் முழக்கம் ஒருவர் பேசுவது மற்றவருக்குக் கேளாதபடி செய்ததால் சினங்கொண்டு வாளியை விட்ட இராமனைப் போன்ற வீரத்தை யுடைய சோழன் என்று கூறுகிறார்.

இராமபிரான் இராவணனின் பத்துச் சிரங்களையும் வெட்டிய சரத்தோன் என்று பின்வரும் அடிகள் கூறும்:

**"மலைபத்தும் வேட்டும் உருமின் மறவோன்**
**தலைபத்தும் வேட்டும் சரத்தோன்"**

(குலோத்துங்க: 10).

ஒட்டக்கூத்தர் பாரதத்திலிருந்து எடுத்துக் கூறிய அரிய செய்திகளைக் கவனிப்போம். இச்செய்திகளால் புலவரது நுண்ணிய ஆராய்ச்சி புலனாகிறது.

கண்ணபிரான் விடைப்பேரினம் தழுவிப் பின்னை என்ற மாதை மணந்ததைப் புலவர் கூறுகிறார்.

**—"விடைப்பே**
**ரினந்தழுவிப் பின்னையைக் கோள்வாய்"**

(குலோத்துங்க: 253).

காளியன் என்ற பாம்பினுடைய படத்தில் கண்ணன் ஆடிய கூத்தையும் ஆயர் சேரியில் ஆடிய குடக்கூத்தையும் கூறுகிறார்.

**"பாடிக் குழலூதிப் பாம்பின் படக்கூத்தும்**
**ஆடிக் குடக்கூத்தும் ஆடினர்"**

(இராசராச: 338).

கண்ணன் ஆய்ச்சியரது துகில்களைக் கொண்ட செய்தியை,

—"தோகையர்

நற்றுகில் கொண்ட நறுந்துழாய் மார்பாநின்
பொற்றுகில் தந்தருளிப் போதேன்பார்"

(குலோத்துங்க: 218).

என்றும், கண்ணபிரான் நாரதருக்குப் பதினுயிரம் திருவிளையாடல்களைக் காட்டிய சம்பவத்தை,

—"மாதவத்தோன்

சார்ந்த பொழுதனகன் தன்னை அறிவித்த
பூந்துவரை யந்தப் புரம்போன்றும்"

(விக்கிரம: 92).

என்றும், கண்ணன் இரு மருதமரங்களை வீழ்த்தமையை,

"ஒருதன் அடியின் மடிய வுபய
மருது பொருத வயவன்"

(குலோத்துங்க: 155).

என்றும் கூறுகிருர்.

# 12

# வருணனைகள் முதலியன

ஆவிச் சக்கரவர்த்தி தீட்டிய வருணனைகளை ஆராய்வோம்.

அரிவைக்குச் சுடர்க்கதிரோன் காட்சி அளித்ததும் அவன் அருளைப் பெற நிலத்தில் நிகழ்ந்த காட்சிகளையும் வருணிக்கிறார் கூத்தர்.

சுடர்க்கதிரோன் எழுந்ததும் ஆயவெள்ளமும் தலைவியும் சோலையில் வருதலைக் கண்டு மானினம் மருண்டு ஓடின. அன்னமும் சேவலும் விழித்தெழுந்து ஆரவாரித்தன. மஞ்ஞைகள் ஆசையோடு ஆடின. அவற்றின் ஆட்டத்திற்குத் தகுந்தாற்போல் கிளிக்குலம் கான மழை பொழிந்தனவாம். நாகணவாய்ப் புள்ளும் சேவலும் நகைத்து மொழி கூறவும் உழவர் அவற்றின் முகம் பாராமல் புறத்திலே முகத்தைச் சாய்த்துத் தங்கள் வேலையில் கவனம் செலுத்தினார்கள். தேனுண்டு மயங்கிக் கிடந்த வண்டு, கோவை செய்யும் களியாட்டம் கண்டு விரும்பி, அதற்கேற்பக் கபோதப் பேடும் சேவலும் தம்மிலே விளிக்கும் தன்மை கண்டு வியந்தனவாம். இவ்வாறு இயற்கைக் காட்சி ஒன்றை மிகவும் நயமாக வருணித்துள்ளார் புலவர்.

(குலோத்துங்க : 272 - 276).

குயில்களைப்பற்றிக் கூறுகையில், 'முற்றாத சொற்குதலைக் கோகுலங்கள்' (இராசராச: 165) என்று அழகாகக் கூறுகிறார்.

மகளிர் நீராடுதலை வருணிப்பதைப் பாருங்கள். அவர்கள் நெடுநேரம் நீரிலே விளையாடினதால் ஏற்பட்ட நிலையைப் பின்வரும் அடிகளில் காணலாம்:

—"வெள்ளம்
வடிய வருஞ்சிவப்பு வள்ளப் பசுந்தேன்
வடிய வருஞ்சிவப்பின் வாய்ப்ப"

(இராச: 293).

நீராடிய மகளிரது கண்கள் நீர் படிந்ததனால் சிவந்து விட்டனவாம். அவற்றிலிருந்து நீர் வழிந்த காட்சி கிண்ணத்திலிருந்து வடியும் செவ்வித்தேனை ஒத்திருந்ததாம்.

## கற்பனை

ஒட்டக்கூத்தரின் கற்பனை சக்தி மிக்க ஆச்சரியத்தை அளிக்கின்றது. ஒவ்வோர் அடியும் மேன்மையான நயத்தை உடையதாயிருக்கின்றது. இவர் கற்பனை சக்தியை அறிவதற்குச் சில அடிகளை நோக்குவோம்:

—"சுடர் நோக்கும்
தானுடைய மெய்ந்நுடக்கம் தன்மா தவிக்களித்து
வானுடைய மின்னுடக்கம் வாங்கினாள்"

(விக்கிரம: 138).

பெதும்பை மிக்க நாணமுடையவள் என்று கூறாது வானத்தில் தோன்றும் மின்னலினது துவளுதலை - 'வானுடைய மின்னுடக்கம்'— வாங்கினாள் என்று கூறுகிறார்.

"திருவிருந்து தாமரையாய்ச் சென்றடைந்த வண்டின்
பெருவிருந்து பேணுங் குழலாள்"

(விக்கிரம: 240).

இவ்வடிகளில் அரிவையை அறிமுகப்படுத்தும் போது, 'பெருவிருந்து பேணுங் குழலாள்' என்று நயமாகக் கூறுகிறார். அவள் கேசத்தில் மலர்கள் விளங்கியதால் வண்டுகளுக்கு விருந்தளிக்கும் கூந்தலையுடையவள் என்று கூறுகிறார்.

ஒரு பேரிளம்பெண்ணின் செய்கையை எவ்வளவு அழகாகக் கூறுகிறார் பாருங்கள். பின்வரும் அடிகளின்

மூலம் புலவரின் கற்பனை சக்தி எல்லையைக் கடந்துவிட்ட தென்றே கூறிவிடலாம்.

—"செம்மை
நிறையும் அழகால் நிகரழித்துச் செய்யாள்
உறையும் மலர்பறிப்பாள் ஒப்பாள்"

(விக்கிரம: 309).

அந்தப் பேரிளம்பெண் தன் சிவந்த கரத்தினால் தனக்கு நிகரான கமலத்தைக் கொய்தாளாம். அக் காட்சி எவ்வாறிருந்தது என்பதை நயத்துடன் இவ் வடிகள் கூறுகின்றன. தாமரையை அவள் கொய்தது தன்னிடம் எழிலிலும் தன்மையிலும் தோல்வியடைந்த திருமகள் வீற்றிருக்கும் இடத்தைக் கைக்கொள்வது போல் இருந்ததாம். என்ன ஒப்பற்ற கற்பனை!

குலோத்துங்கன் புறப்படும் காட்சியைக் கற்பனை சக்தியுடன் வருணித்துள்ளதை நோக்குவோம்:

"இரவிக்கு நிற்பன வேழ மொழியப்
புரவிக் குலமுழுதும் போத"

(குலோத்துங்க: 94).

சோழனுடன் சென்ற பரியின் கூட்டங்களைக் கூறுகையில் சூரியனுக்கு உரியனவாகிய ஏழு குதிரைகளைத் தவிர மற்ற இத்தரணியிலுள்ள எல்லாக் குதிரைகளும் கிளம்பினவாம். இரவிக்குச் சொந்தமான ஏழு குதிரைகளை மட்டும் நீக்கியது, அவன் தன் கடமையைத் தவறாது செய்யும் பெருந்தன்மையைக் கருதியே போலும்! சரி, இனிச் சோழனுடன் செல்லும் குதிரைகளின் காட்சியை வருணித்திருப்பதைப் பார்ப்போம்.

"எழுந்த துகளுருவ எறியுஞ் சுண்ணம்
விழுந்த துகளுருவ வீழ்ந்தும்—தொழுந்தகைய

"விண்ணுலகு மண்ணுல காகி விளங்கவும்
மண்ணுலகு பொன்னுலகாய் மாறட"

(குலோத்துங்க: 96-97).

'இரவிக்கு நிற்பன வேழ மொழிய' மற்றப் பரிகள் சோழனுடன் சென்றபோது அவை எழுப்பிய தூசியானது அண்டகோளமளவும் உருவ ஏறி விண்ணுலகத்தை மண்ணுலகமாக விளங்கச் செய்த தாம். உடன்வருவோர் சிந்திய பொற்சுண்ணம் பூமியின்மீது பரந்து கிடந்ததால் மண்ணுலகு பொன் னுலகமாகத் தோற்றமளித்ததாம். என்ன கற்பனை சக்தி!

கதிரவனின் காட்சியின் வருணனையைப் பாருங்கள்:

"அடுத்தடுத் தேந்திய திவ்யா பரணம்
எடுத்தெடுத் தோப்பித் தெழுந்து - சுடர்க்கதிரோன்
"மாலைப் பகைவியைப் போக்கி வருவித்த
காலைத் துணைவியைக் கண்டேழுந்தாள்."

(குலோத்துங்க: 267- 268).

கதிரோன் தலைவனது மரபோனதலின் அரிவையின் கலக்கத்தைக் கண்டு, அவள் மெலிவோடு வைகல் அமையாதெனக் கருதி அவளுக்கு (அரிவைக்கு) மாலை யாகிய பகைவியைப் போக்கித் தனது துணையான காலையை வருவிக்க அவளைத் துணைவியாகக் கண்டு எழுந்தாள். என்ன கற்பனை சாலம்! சுடர்க்கதிரோன் எழும் காட்சி இவ்வாறு எழிலுடன் வருணிக்கப் பட்டுள்ளது.

இனி இராசராசனின் வீரத்தை எவ்வாறு கற்பனை சாலத்துடன் வர்ணித்திருக்கிறார், பாருங்கள்!

—போர்ப்பூவில்
மேதகு கோற்றவைக்கு வேந்தர் பிரானுவந்த
தாதகி யொன்றுமே சார்பேன்பார்"

(இராசராச: 102).

இராசராசனால் வெல்லப்பட்ட அரசர்கள் வீரம் இழந்ததனால் அவ்வரசர்களுடைய போர்ப்பூக்களை அணிவதை விட்டுவிட்டுச் சோழனுடைய ஆத்திமாலை யைப் பரமேசுவரி சூடிக்கொண்டாளாம். இராசராச

னுடைய வெற்றிகளால் தேவியும் ஆனந்தித்தாள் என்று நயமாகக் கூறுகிறார் கூத்தர்.

## உவமைகள்

ஒட்டக்கூத்தர் தமது நூல்களில் கையாண்டிருக்கும் மற்றோர் அம்சம் உவமைகள். மிக ஆய்ந்து ஓய்ந்து ஆராய்ச்சி செய்து அவர் அவைகளை உபயோகித்திருப்பதை நாம் அறியலாம்.

"அரியன நித்திலத்தின் அம்பொற் றொடித்தோள்
பரியன காம்பிற் பணைத்தும்"

(விக்கிரம: 175).

முத்தினாலாகிய வளையை அணிந்த தோளை மூங்கிலுக்கு ஒப்பிடுகிறார். மூங்கிலும் முத்துப் பிறக்கும் இடங்களில் ஒன்றாதலின் அதை ஓர் ஏற்ற பொருளாக எண்ணி முத்துக்கள் விளங்கும் தோளுக்கு உவமையாக்கிக் கூறியுள்ளார்.

—"திருமார்பிற்
கார்க்கடன் மீதே கதிர்முத்தத் தாமங்கள்
பாற்கடல் போர்த்த தெனப்பரப்பி"

(குலோத்துங்க: 68).

கரிய நிறத்தையுடைய குலோத்துங்கனின் மார்பிற்குக் கார்க்கடலும் தோளின்மீது அணியப்பட்ட முத்துமாலைகளுக்குப் பாற்கடலும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. இரு கடல்களையும் ஒருங்கே சேர்த்துவிடுகிறார் கவிஞர்!

"நிருத்தந் நருமோர் நிதிப்பொருப்பைக் கண்ணுற்
றெருத்தந் திருக்கவின வேறி"

(குலோத்துங்க: 82).

மலைக்கு ஆடும் தொழில் கூறப்பட்டிருப்பதால் இது இல்பொருள் உவமையாகும்.

—"அடங்கா

வயிர்ப்பான் மறலி மகளூநக்கோல் ஈதேன்
றயிர்ப்பார் அயிர்க்கும் அழகாள்"

(குலோத்துங்க: 144).

*மறலி அடங்காத வயிர்ப்புடையானென்று, அவன் வினையைக் குறித்து ஐயப்படுவார்.*

"—உறவாய்

அடர்ந்த பொலன்கேழ் அடிச்சிலம்புக் கன்னம்
தொடர்ந்து மறுமாற்றஞ் சொல்ல"

(குலோத்துங்க: 285).

*சிலம்பின் ஓசைக்கு அன்னத்தின் குரலை உவமையாகக் கூறினர்.*

"வீழ்சோதி சூழ்கச்சு மேரு கிரிச்சிகரம்
சூழ்சோதிச் சக்கரம் தொலைவிப்ப"

(குலோத்துங்க: 282).

*சூரியனையும் ஏனைக் கோள்களையும் கச்சிலுள்ள முகமணியும் அதனைச் சூழ்ந்துள்ள பன்மணியும் விடுகின்ற சோதி வென்றன என்று கூறுகிறார் புலவர்.*

"ஒன்று புனைந்த தொருசங்க மாணிக்கம்
இன்று பயந்த தெனவிளங்க"

(குலோத்துங்க: 320).

*மாணிக்க அணி அணிந்துள்ள கழுத்து, ஒப்பில்லாத சலஞ்சலமென்ற சங்கம் தனக்கு இயல்பாகிய முத்தைப் பயவாமல் புதுமையான ஒரு மாணிக்கத்தை அன்று ஈன்றதெனை விளங்கிற்றும்.*

—"பசுஞ்சுடர்க்

கோல் வயிறுதர பந்தனக் கோணீங்கி
ஆலின் வளர்தளிரின் ஐதாகி"

(குலோத்துங்க: 323).

*குலோத்துங்கனின் அழகிய வயிறு உதரபந்தனமென்னும் குற்றம் நீங்கிப் பசுஞ்சுடர்க்கோலமுடைய*

வாய ஆலமரத்தின் தளிரினும் மெல்லியதாக இருந்தது என்று கூறுகிறார்.

"சோலையின் மான்மதஞ் சூழ்வர வேழிலைப்
பாலையின் மான்மதம் பாரிப்ப"

(இராசராச: 205).

யானையின் மதநாற்றத்தை ஏழிலைப் பாலையின் மலரது மணத்துடன் ஒப்பிட்டுள்ளார்.

# 13

# வேறு நூல்கள்

## குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்

ஒட்டக்கூத்தர் இயற்றிய மற்றொரு நூல் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழாகும். இந்நூல் இரண்டாம் குலோத்துங்கன்மீது பாடப்பெற்றது. சரித்திர ஆராய்ச்சிக்கு இன்றியமையாத குறிப்புக்களும் சொற்பொலிவும் பொருட்பொலிவும் இதில் விளங்குகின்றன.

"கூடிய சீர்தந்த வென்றெடுத்த கூத்தனுலாச்
சூடிய விக்கிரம சோழனும்—பாடிய
வெள்ளைக் கவியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றேனும்"

—சங்கர சோழனுலா.

இந்நூலினால் குலோத்துங்கன் சிவபக்தனென்பதும், சிற்றம்பலம் பேரம்பலம் திருக்காமக் கோட்டம் முதலிய கோயில்திருப்பணிகள் செய்தவனென்பதும் தெரிகின்றன. காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், அம்புலிப் பருவம், சிற்றிற்பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப்பருவம் என்ற பகுதிகளையுடையது இந்நூல்.

"பூமன்னு பொழிலேழுங் கடலேழுங் கடவுட்
பொருப்பேழும் எனநிலவு மதுரைக்கும் புகார்க்குங்
கோமன்னன் புவனதரன் விக்கிரம சோழன்
குலமதலை குலோத்துங்க சோழனைக் காத்தளிக்க"

(குலோத். பிள்ளை: 1).

இவ்வாழ்த்துப் பாட்டினால் குலோத்துங்கனிடம் கூத்தர் கொண்ட விசுவாசம் விளங்குகின்றது.

“வலவரை வென்றுபோர மனுமுதல் ஆகவரு
நிலவரை ஏழுடைய நீள்கடல் ஏழுடையாய்
புலவரை யேறவிடாப் புகர்முக மாபொழியும்
தலவரை ஏழுடையாய் கொட்டுக சிறுபறையே.”

(குலோத். பிள்ளை: 82)

இவ்வடிகளால் சோழன் புலவர்களிடம் காட்டிய மதிப்பு விளங்குகிறது.

“பாடற் பெரும்பரணி தேடற் கருங்கவி
கவிச்சக்ர வர்த்தி பரவச்”

(குலோத். பிள்ளை: 14).

கூத்தரின் பட்டம், ‘சக்கரவர்த்தி’ என்று இவ்வடிகள் தெரிவிக்கின்றன. தவிர அவர் ஒரு பரணியும் பாடியதாகத் தெரிகிறது. இப்பரணி விக்கிரமன்மீது பாடப்பட்டது. இது கிடைக்கவில்லை.

## தக்கயாகப்பரணி

ஒட்டக்கூத்தர் இயற்றிய மற்றொரு சிறந்த நூல் தக்கயாகப்பரணியாகும். பரணி என்பது தமிழ் மொழியில் விளங்கும் பிரபந்தங்களில் ஒன்றாகும். கடுஞ் சமர்புரிந்து வெற்றிபெற்ற வீரனைப் புகழ்ந்து பாடுவதைப் பரணியென்று கூறுவர். ஆனால் உண்மையில் அதன் இலக்கணத்தை வேறு விதமாக விளக்குவர் சிலர். போர்க்களத்தில் ஆயிரம் களிறுகளைக் கொன்ற வீரன் மீது, கடவுள்வாழ்த்து, கடைதிறப்பு முதலிய உறுப்புக்களைச் சேர்த்து, வீரனுடைய சிறப்புக்களைப் பலவாறு கூறியமைத்து, கலித்தாழிசையிற் பாடப்படுவதைப் பரணி என்று கூறுவர். காளியையும் யமனையும் தன் தெய்வமாகப் பெற்ற பரணியென்னும் நாண்மீனால் வந்த பெயர் பொருத்தமுடையது என்று டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் கூறுகிறார். இதுவே சிறந்த பொருளாகும்.

கலிங்கத்துப் பரணி, தக்கயாகப் பரணி, இரணிய வதைப் பரணி, மோகவதைப் பரணி முதலிய பரணிகளும் உண்டு. இப்பரணிகளில் சில அரசர்கள்மீதும் சில தெய்வங்களின்மீதும் மற்றும் சில ஆசிரியர்களின்மீதும் இயற்றப்பட்டுள்ளன.

தக்கன் சிவபெருமானை அவமதித்து ஒரு யாகத்தை நடத்தத் துணிந்தபோது ஸ்ரீ வீரபத்திரக் கடவுள் அந்த யாகத்தை அழித்துத் தக்கனுக்குத் துணையாக நின்ற தேவர்களை வென்று தக்கனைத் தண்டித்த வரலாற்றைத் தக்கயாகப்பரணி கூறுகின்றது. இந்நூல் இரண்டாம் இராசராசன் வேண்டுகோளின்படி ஒட்டக் கூத்தரால் இயற்றப்பட்டது. இராசராசன் கி. பி. 1145-ல் சிங்காதனம் ஏறினதால் இந்நூல் அவ்வருடத்திற்குப் பிறகே - அதாவது கி. பி. 1146 முதல் கி. பி. 1162 - ஆம் வருஷத்திற்குள் - இயற்றப்பட்டிருக்க வேண்டும். இராசராசனுடைய வீரச்செயல்களை உவமை முகத்தாலும் வேறு வகையாலும் இந்நூலில் கூத்தர் பாராட்டியிருக்கிறார்.

இப்பரணியில் வைரவக் கடவுள் காப்பும் உமாபாகர் வாழ்த்தும் ஆளுடையபிள்ளையார் வாழ்த்தும் அவர் சமணரை வாதத்தில் வென்ற கதையும் கூறப் பட்டிருப்பதால் இந்நூலைச் சீர்காழியில் கூத்தர் இயற்றியதாக அறிஞர் கூறுவர்.

## தக்கயாகப்பரணியும் மற்றப் பரணிகளும்

பரணிகள் பாட்டுடைத் தலைவனுக்கு நன்மை உண்டாகும்படி வாழ்த்துகின்றன. தக்கயாகப்பரணி ஆக்குவித்தோனுக்கு நன்மை உண்டாகும்படி வாழ்த்தியிருக்கிறது. தவிர இது உமாபாகர், முருகன், திருஞானசம்பந்தர் இவர்களை மட்டும் வாழ்த்தியிருக்கிறது. ஆளுடையபிள்ளையார் சமணரை வென்ற கதையைக்

கூறிச் சைவமதத்தின் மகிமையைப் புலவர் இப்பரணி யில் வருணித்துள்ளார். கூழடுதல் என்ற பகுதியில் பேய்கள் பிணங்களைக் கூழாக்கிக் குடித்துவிட்டுப் பாட்டுடைத் தலைவனைப் புகழாமல் இந்நூலை ஆக்கு வித்த இராசராசனையும் அவனது முன்னோர்களையும் வாழ்த்துகின்றன. காளி பிசாசுகளுக்குக் களங்காட்டிய தாகக் கூறியது போலன்றிக் கதை மறைமுகமாகப் புலப்படும்படி தேவிக்குச் சிவபெருமான் காட்டியதாகக் கூறியுள்ளார் புலவர். சில இடங்களில் யாமளசாஸ் திரத்தை அடிப்படையாகக்கொண்டு சில செய்திகளைக் கூறியுள்ளார். இந்நூலை ஆக்குவித்த இராசராசனை இறுதி யில் ஒரு தனிப் பகுதியில் கவிஞர் வாழ்த்தியுள்ளார்.

தக்கயாகப்பரணியில் மொத்தம் எண்ணூற்றுப் பதினான்கு தாழிசைகள் உள்ளன. இவைகளை உரைப் பகுதியில் காண்கின்றோம். இந்நூல் வைரவக் கடவுள் காப்பை முதலில் கூறி, கடவுள் வாழ்த்து முதல் பதினோர் உறுப்புக்களால் முடிகின்றது.

## பதினோர் உறுப்புக்கள்

### 1. கடவுள் வாழ்த்து (1 - 9)

ஒட்டக்கூத்தர் முதலில் உமாபாகரை வாழ்த்து கிறார். பிறகு விநாயகர், முருகன், ஆளுடையபிள்ளை யார் இவர்களை வாழ்த்திவிட்டுச் சோழனுக்கு வெற்றி யுண்டாகும்படி வாழ்த்துகிறார்.

### 2. கடை திறப்பு (10 - 47)

ஸ்ரீ வீரபத்திரதேவருடைய வெற்றியைப் போற் றிப் பாடிக் கதவுகளைத் திறக்கும்படி பல மகளிர் கூறுகிறார்கள். இப்பகுதியில் தேவி, இராசராச புரீசர், அகத்தியர், தெய்வமகளிர், சோழன் ஆகியவர்க ளுடைய வீரத்தையும் சிறப்பையும் புகழ்கிறார். இறுதி யிலுள்ள நான்கு தாழிசைகளில் தேவர்கள் தோற்ற

செய்தியைப் பாடுவதற்குக் கடை திறமின் என்று கூறு முகத்தால், கடைதிறப்பு இத்தன்மையது என்று விளக்குகிறார் கூத்தர்.

### 3. காடு பாடியது (48 - 102)

இப்பகுதியில் தேவியின் இருப்பிடமாகிய பாலை வனம், வாமமார்க்கத்தாருடைய செயல்கள், காளி கோவிலைச் சூழ்ந்த சோலையின் வருணனை, யோகினிகள், பைரவர்கள் ஆகிய இவர்களின் செயல்கள் முதலியன அழகாகக் கூறப்பட்டுள்ளன.

### 4. தேவியைப் பாடியது (103 - 119)

இதில் காளியின் சிறப்பும் அவளுக்கு நடக்கும் பூஜையின்போது உபயோகப்படுத்தும் திரவியங்களும் கூறப்பட்டுள்ளன.

### 5. பேய்களைப் பாடியது (120 - 135)

இப்பகுதியில் பேய்களின் வருணனையும் அவை பசியினால் அடையும் தன்மையும் கூறப்பட்டுள்ளன.

### 6. கோயிலைப் பாடியது (136 - 221)

இதில் காளிகோயில், ஆதிசேடன், பஞ்சாயுதங்கள் இவை விரிவாக வருணிக்கப்பட்டுள்ளன. இதில் ஒரு கதையும் அடங்கியுள்ளது. காளி நாமகளை வரவழைத்து முருகக்கடவுள் ஆளுடையபிள்ளையாராக உதித்துச் சமணரை வாதத்தில் வென்ற கதையைக் கூறும்படி கட்டளையிட அவ்வாறே கலைமகள் அக்கதையைக் கூறுகிறாள்.

### 7. பேய் முறைப்பாடு: (222 - 244)

காளி நாமகளுடன் மகிழ்ந்திருத்தலை அறிந்து பேய்கள் அத்தருணம் ஏற்றது என்று எண்ணித் தம் குறைகளைக் காளியிடம் கூறுகின்றன: 'பண்டைக் காலத்தில் நடைபெற்ற சமர்களில் நாங்கள் பசிதீர உண்டு மகிழ்ந்தோம். இப்பொழுது பசியின் கொடுமையினால்

வருந்துகின்றோம்' என்று கூறி அவை முறையிட்ட பின் தாங்கள் கண்ட கனுக்களை அவளிடம் கூறும் போது தக்கன் யாகத்தை அழிக்கச் சென்ற பூதகணங்க ளோடு முன் சென்ற ஒரு பேய் முன்வந்து, 'பசிதீர என்னுடன் வாரீர்' என்று அவைகளை அழைத்துச் செல்ல, தேவி அப்பேயைப் பிடித்துவரச் செய்து, தேவர்கள் தக்கன் யாகத்தினல் அழிந்த வரலாற்றைக் கூறும்படி கட்டளையிட அது அவ்வாறே கூறுகின்றது.

8. கர்ளிக்குக் கூளி கூறியது (245 - 727)

எல்லாப் பகுதிகளிலும் இப்பகுதிதான் மிகப் பெரி தாகும். இதில் தக்கன் சிவபெருமானை அவமதித்து யாகம் செய்ய, அதில் கலந்துகொள்ள வந்த தாட்சா யணி தக்கனல் அவமதிக்கப்பட, தேவி சினந்து செல்ல, அதை அறிந்து சிவபெருமான் வீரபத்திரக் கடவுளை அழைத்துத் தக்கனுடைய வேள்வியை அழிக்கும்படி கட்டளையிட, வீரபத்திரர் பூதகணங்களுடன் சென்று தக்கனையும் அவனைச் சார்ந்த தேவர்களையும் அழிக்க, இறந்த தேவர்கள் பேய்களாக மாறினது முதலிய சம்ப வங்களை விரிவாகக் கூறியுள்ளார் கூத்தர். இப் பகுதியில் தக்கனுடைய யாகம், தக்கனுடன் சேர்ந்த தேவர்கள், தேர்கள், களிறுகளின் பெருமை, உமா தேவியாரின் செயல்கள், தேவியின் சினத்தின் தன்மை, வீரபத்திரருடைய தோற்றம், பூதகணங்களின் பயங் கரச் செயல்கள், சமர்க்களம், தேவர்கள் மடிந்த காட்சி, பத்திர காளியின் படையெழுச்சி, புட்களின் வீரச் செயல்கள் முதலிய அரிய விடயங்கள் வருணிக்கப்பட் டுள்ளன.

9. கூழ் அடுதலும் இடுதலும் (728 - 777)

கதையைக் கேட்ட தேவி யாகசாலைக்குச் சென்று கூழடும்படி பேய்களுக்கு அநுமதி அளிக்க, அவை களும் சென்று பிணங்களைக் கூழாகச் சமைத்துக் காளிக்குப் படைத்து, பிறகு தாமும் உண்டு, இராச

ராசனையும் அவன் முன்னோர்களையும் வாழ்த்தின. இவ் விஷயத்தில் இப்பரணி மற்றப் பரணிகளில் வேறுபட்டுள்ளது. பாட்டுடைத் தலைவனை வாழ்த்தாமல் ஆக்குவித்தோனையும் அவன் முன்னோர்களையும் பேய்கள் வாழ்த்தியிருக்கின்றன என்பதை அறிக.

### 10. களங்காட்டல்: (778 - 799)

இப்பகுதியில் சிவபெருமான் அம்பிகையோடு போர்க்களத்துக்குச் சென்று அங்கே மாண்டு கிடந்த தேவர்களை அவளுக்கு அறிமுகப்படுத்த, அம்பிகை கருணைகொண்டு சினந்தணிந்து தேவர்களுக்கு அருள் புரியும்படி சிவபெருமானை வேண்ட, அவரும் மனமிரங்கித் தம்மை இகழ்ந்த தக்கனுக்கு ஆட்டுக்கடாத் தலையையும் மற்றவர்களுக்கு உயிரையும் அருளினார். உயிர்பெற்ற தேவர்கள் வீரபத்திரக் கடவுளைப் புகழ்ந்து தத்தம் இடங்களுக்குச் சென்றனர் என்று கூறப்பட்டுள்ளது.

### 11. வாழ்த்து (800 - 814)

இதில் தம்மை ஆதரித்த இராசராசனையும் பிறரையும் கவிஞர் வாழ்த்துகிறார். உறையூரையும் பொன்னியையும் கலைமகளையும் தமிழ்மொழியையும் புகழ்கிறார். ஆக்குவித்தோனிடத்திலுள்ள பேரன்பால் இப்பகுதியைக் கூத்தர் இயற்றியுள்ளதால் மற்றப் பரணிகளுக்கு இது வேறுபட்டதாகும்.

## ஆளுடையபிள்ளையாரின் சரித்திரம்

**த**க்கயாகப்பரணியில் ஆளுடைய பிள்ளையார் சமணரை வாதத்தில் வென்ற கதை மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கோயிலைப் பாடிய பகுதியில் இதைக் காண்கின்றோம். காளி நாமகளை விளித்து முருகக் கடவுள் ஆளுடையபிள்ளையாராகி வந்து சமணரை வாதத்தில் வென்ற கதையைக் கூறும்படி கட்டளையிட,

அவ்வாறே கலைமகள் கூறுகிருள் என்று நயத்துடன் கதையை ஆரம்பிக்கிருர் புலவர்.

“வருகதை தெய்வமகளேன் மருமகள் வள்ளிவதுவை
மனமகிழ் பிள்ளைமுருகன் மதுரையில் வெல்லுமினிய
தொருகதை சொல்லு ”

என்று தேவி கட்டளையிட நாமகள் கூறுகிருள்:

ஆளுடையபிள்ளையார் மதுரையை அடைந்து ஒரு மடத்தில் தங்கியிருக்க, அதை அறிந்த சமணர்கள் அவர் கோயில்கொண்ட மடத்தை வெங்கனல் கொண்டு கொளுத்தவே அவர் அத்தீ பாண்டியனை வெதுப்பு மாறு ஏவினுர். அக்கனல் தென்னர்பிரான் உயிர் கொள்ளைகொண்டு உடலங்கிளர்ந்து கொதிப்ப வந்து கொளுத்தவே சமணர்கள் தங்கள் மந்திர யந்திரங்களைக் கொண்டு நீக்க முயன்றும் தணியாது அதிகரித்தது. இதனை அறிந்த பாண்டியன் தேவி மங்கையர்க்கரசியார் அஞ்சி, மந்திரியை அனுப்பி ஆளுடையபிள்ளையாரை வரவழைத்தாள். அவர் வந்ததும் தேவி, தென்னற்கருகே ஒரு பீடிகையிட்டு, ‘இனிதேறியிருந்து அருள்செய்க’ என வேண்டினுர். ‘சோணுட்டில் பிறந்த ஓர் அந்தணச் சிறுவன் பாண்டியனைத் தொடுவதா!’ என்று சமணர் ஆளுடைய பிள்ளையாரை இகழ்ந்து பேசினர். ஆனல் குலதேவியின் வேண்டுகோட்படி திருநீறிட்டார் பிள்ளையார். திருநீறு நெற்றியில் இட்டதுமே வெப்பம் தணிந்தது. பிறகு அதிகாரிகளும் பெருமான்மகளாரும் அவரை வணங்கினுர்கள். சமணர்கள் பொருமை யோடு பாண்டியனை நோக்கி, ‘நாங்கள் நீக்க முடியாத வெப்பத்தை இச்சிறுவனு நீக்கினுன்?’ என்று வினவ, மன்னன்,

“நீர்வந்து தொடத்தொட வெந்துருகா
நெடுவேனில் சுடச்சுட நின்றுலறிக்
கார்வந்து தொடத்தொட வுய்ந்திளதங்
காடோத்தனேன் யானிவர் கைப்படவே”

என்றனன். சமணர் பாண்டியன் வார்த்தைகளை நம்பாது, 'அரசே! இவ்வந்தணச் சிறுவனுடைய மந்திர யந்திரங் களின் ஆற்றல்களை நீராலும் நெருப்பாலும் அறிவோம். மந்திரங்கள் எழுதப்பட்ட ஏடுகள் தீயிலிடும்போதும் வைகைநீரில் இடும்போதும் முறையே எரியாமலும், எதிரோடுவனவுமாகியவற்றை உடையாரே வென்றவர் ஆவர். இப்பரீட்சையில் தோற்றவரைக் கழுவில் ஏற்றுக' என்றனர். இதைக் கேட்ட குலதேவி மங்கை யர்க்கரசியார், சமணர்கள் மந்திரங்களில் வல்லவரென்று கூறி அஞ்சி,

"மலைகொண்டெழ வார்கடல் கொண்டெழுவார்
மினைவந்து சிலாவரு டஞ்சோரிவார்
நிலைகொண்டெழ வார்கொலை கொண்டெழுதற்
கிவரிற்பிறர் யாவர்நி சாசரரே"

என்று சமணர்களைப்பற்றிக் கூறி அவர்களுடன் வாதம் செய்யாது சீர்காழி போகும்படி ஆளுடைய பிள்ளையாரை வேண்டினர். அவர் வார்த்தைகளைக் கேட்ட ஆளுடையபிள்ளையார், 'உலகத்திலுள்ள அக்கினிகளெல்லாம் எங்கள் அக்கினி. அவ்வக்கினியால் விளைவன மழை. அம்மழை வந்து சொரியும் ஆற்றுநீர் எங்கள் நீர். ஆதலால் நான் இடும் ஏடுகளை அக்கினி சுடாது; உடன்கொண்டுபோகா சலமும்' என்று கூறித் தைரியமூட்டினார். பின்பு பரீட்சை நடைபெற்றது. சமணர்கள் விட்ட ஏடுகள் தீயில் எரிந்து விட்டன. வைகையில் இட்டவை கடலில் சேர்ந்தன. ஆளுடைய பிள்ளையாருடைய ஏடுகளோ,

"பொற்பங்கன விற்புத மேநறவும்
புனலிற்புத மேடேதிர் போகவுமேழ்
வெற்பும்பிள வோட வொலித்தன."

இந்நிகழ்ச்சியைக் கண்ட யாவரும் மகிழ்ச்சியினால் ஆரவாரித்தனர். பின்னர் பிள்ளையார் பாண்டிய னுடைய உடம்பில் திருக்கை வைத்தவுடன், 'இருகூனு

நிமிர்ந்தன தென்னவர்கோன், முதுகுந்தட மார்புமிடம்' பெற்றன. சமணர்கள் தோல்வியுற்றதால் அவர்களைக் கழுவிலேற்ற உத்தரவிட்டான் பாண்டியன். 'ஈது ஆகாது' என்று தடுத்தார் பிள்ளையார். ஆனால் சமணர் தாம் கூறிய சபதத்தை நிறைவேற்றினார்கள். இக்கதையைக் கூறிய நாமகளைத் தன்முன் இருக்கும்படி பரமேசுவரி அருளினாள்.

நாமகளின் சிறப்பையும் அவள்பால் தமக்குள்ள பேரன்பையும் இப்பகுதியில் பல இடங்களில் தெரிவிக்கிறார் புலவர். இக்கதையை நோக்குமிடத்து இவருக்குச் சைவமதத்தின்பால் நிறையப் பற்றுதல் இருந்தது என்பது வெளிப்படையாகின்றது. சமணர்களுடைய மந்திர தந்திர வேலைகளை மறைமுகமாகக் கூறியுள்ளார். பெண் இனத்தின் மாசற்ற உள்ளத்தை நன்கு அறிந்தவராதலால் மங்கையர்க்கரசியார் ஆளுடையபிள்ளையாரைச் சீர்காழிக்குப் போகும்படி கெஞ்சிக் கூறிய செய்தியை மிகவும் உண்மையாகவும் அழகாகவும் பாவம் பொலிய எழுதியுள்ளார் கவிஞர். இக்கதையை நேராகக் கூறாது ஒருவர் கேட்க மற்றவர் கூறுவதுபோல் இந்நூலில் கூறியிருப்பது ஒரு விசேஷ அம்சமாகும். இவ்வளவு நீண்ட கதையை மிக்க விரிவாக எளிய நடையில் கூறியிருப்பது போற்றத்தக்கதாகும். 'காளிக்குக் கூளி கூறியது' என்ற இப்பகுதி எல்லா உறுப்புக்களையும்விடப் பெரியது. 482 தாழிசைகளால் முடிக்கப்பட்டது. மிக்க கடினமான வேலைப்பாடாகும் என்பதை நாம் மறக்கக் கூடாது.

## சமணர்கள்

தக்கயாகப்பரணியில் சமணர்களைப்பற்றிக் கூத்தர் மிகவும் விரிவாகக் கூறியுள்ளார்.

சமணர்கள் தாங்கள் கூறிய வார்த்தைகளை மீறமாட்டார்களென்பதை, அவர்கள் தாமாகவே கழுவிலேறிய

சம்பவத்தினால் அறிகின்றோம். அவர்கள் பொய் சொல்லா விரதத்தைக் கொண்டவர்கள்; மந்திர தந்திரங்களில் வல்லவர்கள். அவர்கள் தங்கள் மந்திரச் செயல்களினால் பாண்டியனுக்குத் தங்கள் மதத்தில் பற்று உண்டாகும்படி செய்துவந்தார்கள் என்பது புலனாகின்றது. ஆளுடையபிள்ளையார் தங்கிய மடத்தை அவர்கள் கொளுத்திய செய்கை, அவர்கள் மற்ற மதத்தினரிடம் கொண்ட வெறுப்பைக் காட்டுகிறது. அவர்கள் உறையூரில் கல்மழையும் மண் மழையும் பெய்வித்த சம்பவம் அவர்களின் அபார மந்திர சக்தியின் தன்மையை வெளிப்படுத்துகின்றது.

## தேவியின் வர்ணனை

இந்நூலில் தேவியைப்பற்றிக் காடு பாடியது, தேவியைப் பாடியது, கோவிலைப் பாடியது, கூழடுதலும் இடுதலும் ஆகிய இவ்வுறுப்புக்களில் கூறப்பட்டுள்ளது. தேவி அகில லோகத்தையும் அமுதுசெய்யும் வன்மை வாய்ந்தவள்; கரிய நிறத்தையுடையவள்; சக்கராயுதம், தண்டாயுதம், கட்காயுதம், வில், சங்கம் என்ற பஞ்சாயுதங்களையுடையவள். மரகதச்சோதி பொலியும் திருமேனியுடையவள்; ஈசுவரன் அவள் திருமார்பில் வீற்றிருக்கிறார் என்பவற்றை அறிகிறோம். அவள் ஈசனுக்குத் தாயாவாள் (தக்க: 77). உலக முழுவதற்கும் தாயாவாள். "முனிந்துலகினன்னையருள் செய்வாள்" (தக்க: 294).

"வனமலரோ பூமாரி வானக்கற் பகமலரே
கனசலமோ வபிடேகங் கடவுட்கங் காசலமே,"
(தக்க: 115).

என்றதால் தேவிக்குக் கங்கைநீர்தான் திருமஞ்சனம்; சந்திர சூரியரே அவளுடைய குழைகள்; தேவியின் படுக்கை அரவரசு; அவளுக்குப் பொன்னுடை சாத்துவார்கள். 'பணிமதாணி மார்பாளே' என்றதனால்

யாம்பே பதக்கமென்பது தெரிகிறது. 'சூட்டு முல்லையோ முதற்கற்பு முல்லையோ' (தக்க: 119) என்றதால் இவள் சூடுவது முல்லைப் பூவாகும்.

தேவியின் கோவிலில் விண்ணுலகத்திலுள்ள கின்னரமிதுனங்களான அபேதப்புட்கள் சஞ்சரிக்கும். இந்திராதியர் அவ்விடத்தில் அந்தரதுந்துபி முழங்குவர் (தக்க: 112). 'நிருதர் பூதம் வரவலகை யோட்டுமே' என்றதால் அவள் கோவிலில் நிருதர்கள் வரவொட்டாமல் பிசாசுகள் தடுக்குமாம். அங்கே பிரமாக்களும் இந்திரர்களும் ஆகமங்களை ஓதுவார்கள். கோவிலில் திங்கள் குடையாக நிழல் புரியும். 'புரிசை காலொரு சூலமே' என்றதால் கோவிலினது திருமதில் சக்கரவாளம். 'சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண்டாயிரஞ் சுடரொடுஞ் சூழ்வருவரே', 'எளிதளித்தன சார்தருத்தொகை இரவிபுற்கிட வெழிலியுந், தளிதளித்திரு தனுவெடுத்தன தகன மற்றது ககனமே' என்றதனால் கோவிலின் கற்பகங்கள் நிழலையும் ஒளியையும் அளித்துச் சோதியை விடுமாம். கோயிலிலுள்ள, 'வேதநாயகி விமானபீடிகை யநேக கோடிபட மேருவே' என்று கூறுகிறார் கவிஞர்.

தேவி தன் கையில் தெய்வக்கிளியை யுடையவள்; மற்றொரு கையில் சூலத்தை யுடையவள். அவளுக்கு யாளி வாகனமாக அமைந்தது. தேவி தன் திருச்சக்கராயுதத்தினால் ஒன்பது கோடி இரணியர்களுடைய உடல்களைப் பிளந்தாள். 'மேலாய வுவணவூர்தி யூர்வாளே' என்றதால் தேவி கருடபகவான்மீது அமர்ந்து பதினான்கு உலகங்களையும் சுற்றித் திரிவாளாம். தேவியின் வாள் வடிந்த குருதி படிந்து பொலியுமாம்.

தேவியைப்பற்றிக் கூறிய வருணனையினால் இப் புலவர் அவளிடம் மிக்க பக்தி கொண்டவரென்பது தெரிகிறது. ஈசுவரனுக்குத் தாயாவாள் என்று

கூறியதால், அவளை ஓர் உயர்ந்த ஸ்தானத்தில் வைத்துக் கவிஞர் போற்றியதை அறியலாம்.

## பாலை

பரமேசுவரிக்குச் சொந்த இடமான பாலை நிலத்தை வருணிக்கிறார் புலவர்: 'பால்வ றந்துகீழ் நின்றகள்ளியும், பசைவ றந்துபோய் மீமிசைச், சூல்வ றந்துபோய் மாகம் மேகமும்' (தக்க: 49) என்று பாலையை வருணித்துத் தாம் தீட்டிய சித்திரத்தை நம் மனக்கண்முன் காட்டுகிறார் கூத்தர். அங்கே கொடிய வெப்பத்தால் வேகும் பிணங்களை, 'பேய், நிணங்கரைந் துருக நெய்யை நீரென நினைத்து நாவினை நனைக்குமே' (தக்க: 50). பாலையிலுள்ள 'புற்றினின்றெழு புயங்க சூடிகை நெருப்பு விட்டசிறு பொறியெனப் பற்றி நின்றன' (தக்க: 52). பேய்கள் தேர்களில் செல்லும் முழக்கம், உகாந்த காலத்துக் கடலே கிளர்ந்து புறப்பட நடுவே முழுகிப்போய் எழுகின்ற சப்த பருவதங்களை யொக்குமாம்.

## வீரபத்திரரின் வீரச்செயல்கள்

வீரபத்திருடைய வீரச்செயல்களைக் கூறுவதற்கு முன் தேவர்களுக்கும் இவருக்கும் ஏற்பட்ட சமரின் காரணங்களை அறிவது நன்று.

நாமகள் அருள்கூர்ந்து உவகையுடன் இருக்கும் போது அதுவே நல்ல தருணம் என்று எண்ணிப் பேய்கள் அவளிடம் தங்கள் முறையீடுகளைக் கூறிப் பசியைத் தீர்க்க அருள் புரியும்படி வேண்டி, அதன்பின் தாங்கள் கண்ட கனாக்களைக் கூறின. அப்பொழுது தக்கன் யாகத்தை அழிப்பதற்குப் படைபோன பூத கணங்களோடு முன்பு சென்றிருந்த பேயொன்று ஓடி வந்து, 'பசி தீர்க்க என்னுடன் வாரீர்' என்று கூவி யாகசாலைக்கு அழைத்துச் சென்றது. காளி அப் பேயைப் பிடித்து வரச்செய்து,

"அஞ்ச லேன்றுதிரு வாய்மலர்ந் தயனும்
அம்பரத் தவனும் உம்பரும்
எஞ்ச லின்றியுட னின்ற விந்தபடி
எம்ப டைக்குரைசெய் கென்னவே"

என்றுகூற, அவ்வாறே அப்பேய் தக்கன் யாகத்தையும் வீரபத்திரதேவருடைய வீரச்செயல்களையும் தக்கனும் மற்றத் தேவர்களும் அழிந்து பேய்களாக மாறிய விஷயத்தையும் கூறும்.

சிவபெருமான் யாகத்திற்குக் கர்த்தாவெனச் சொல்லுகின்ற புராண, ஆகமங்கள் நிற்க வேறொரு சாத்திரத்தைப்பற்றி யாகத்தை இயற்றக் கருதிய தக்கன், வானவர் வருகவென்று அழைத்தான். அப்பொழுது திக்குப் பாலகர், துவாதசாதித்தர், ஏகாதச ருத்திரர், அச்சுவினி தேவர்கள், மருத்துக்கள், அட்டவசுக்கள் முதலியோர் வந்தனர். இந்திரன் அயிராபதத்தோடு வந்தனன். பிரமதேவரும் திருமாலும் வந்தனர்.

ஈசுவரனுடைய திருமார்பிலுள்ள பரமேசுவரி தக்கன் மனையிலே புக்கருளினாள். அங்கே தக்கனால் அவமதிக்கப்பட்டு மிகுந்த சினத்துடன் கைலைக்குச் சென்று சிவபெருமானிடம் நடந்தவற்றைக் கூறினாள். அதைக் கேட்ட சிவபெருமான் கோபங்கொண்டார். கோப அனல் எழுந்தது. வைத்த பூணும் உயிர்ப் பழன்றன. உகாந்தாக்கினியும் எழுந்து கோபித்தது. பெருமான் வீரபத்திரரை அழைத்து, 'மாமன் வேள்வி தகர்க்க' என்று கட்டளையிட்டார். வீரபத்திரர், 'திரண்ட பூத பைசாசம் ஆயிர கோடிகோடி, திறத்தவாய் இரண்டுபாலும் உடன்வரப்' போருக்குக் கிளம்பினர்.

வீரபத்திர தேவருடைய பெரும்படை எழுந்து புறப்பட்டபோது எல்லா உலகங்களிலும் நிழலிட வல்லவையான ஏழு சோலைகளும் நோய்ப் போயின வாம். சத்த குலபருவதங்களும் நோய்ப் போயின. இப்பெரும் படையின் மகாவயிறு ஆகாயத்தை ஒக்கும்.

படைக்கணத்தவர் எல்லாக் கடல்களையும் குடிக்க வல்ல தேவர்களை ஒப்பர். அப்படைக்கு எதிராக இந்திர னுடைய படை கிளம்பியது. அப்படை மதயானை களைத் திரட்டியும் புலிகளை நெருங்கப் பெருக்கியும் யாளிகளையும் ராச சிங்கங்களையும் பரப்பியும் போருக்கு ஆயத்தமாயிற்று. நிலைமை மோசமாக இருப்பதை அறிந்த இந்திரன் தம்பி உபேந்திரன் துணையாக நின்றான். மகாவிஷ்ணு கடைக்கூழைத் தந்திரத்தை ஏவியருளினான். அவனுக்குத் துணையாகத் தன் மக்க ளுடனும் ரிஷிகளுடனும் சமருக்கு நின்றான் பிரமன்.

தக்கனுக்கு இவர்கள் துணையாக நின்றும் பலம் பொருந்திய படை இருந்தும் வீரபத்திர தேவரின் படைகள் அப்படைகளைச் சிதறவடித்தன. விஷ்ணுவும் தேவர்களும் பூதபசாசரது யூதபதிகளால் விழுந்து பட்டுப்போக, 'மீளவாழு நாள்கொடுத் தெழுந்து போர் தொடங்குகென்று குன்றவில்லி யேவ' மறுபடியும் கடுஞ்சமர் தொடங்கியது. 'சிரமுஞ் சிர முஞ் செறிந்தன, சரமுஞ் சரமுந் தறிப்பவே; கிரியுங் கிரியுங் கிடைத்தன, தலையுந் தலையுந் தகர்ந்தன.' தேவர்கள் அழிய அழியப் பிரமன் படைத்துக்கொண் டிருந்தான். ஆனால் பூதகணங்கள் அவைகளை மறுமுறை யும் அழித்தன. தேவர்கள் மடிந்து பேய்களாக மாறினர். 'தேரில்லை கரியில்லை பரியில்லை யிவைநிற்க தேவென்ப தோர்பேரிலை; சுரராசன் விடுசேனை பேய்தின்று பேய்' ஆனார். ஆனால், 'பின்னையும் பிரமகன் படைக்கப் பேரமர் முன்னையின் எழுமடி முடுகி'க் கிளம்பினர்.

அப்பொழுது பத்திரகாளி தன் படையுடன் எழுந் தாள். அவள் பின் வீரபத்திரர் படை நின்றன. மோக மோகினிகள், யோகயோகினிகள், நாகசாளிகள், பட்சி சாதிகள் முதலியோர் இச்சமரில் கலந்துகொண்டனர். பத்திரகாளி வாளியேவி உலகை வளைத்தாள். அவள் படைகள் பிரமன் படைப்பையெல்லாம் கொன்று,

பிணங்களை அற்பமும் தோன்றாதபடி உண்டு மகிழ்ந்தன வாம். வீரபத்திரர் போர்க்கோலங்கொண்டு எழுந்தார். தேவர்கள் வலியிழந்தனர். இட்டவெண்குடை, வீசு சாமரை எல்லாம் இழந்தார்கள். மரணமே வெற்றியாகக் கொண்டு அதிரப்பொரு தும்பை சூடினார்கள். இந்திரன் தோமரப் போர் செய்யத் தொடங்கினான். திருமாலும் போரில் கலந்துகொண்டார். இந்திரன் ஆகாச கங்கையை எழுப்பினான். அவர்களை எதிர்த்து வீரபத்திரருடைய படைகள் அஞ்சாது போராடின. இந்திரன் படைகள் முதுகு காட்டி ஓடலாயின. 'பிரமர் அழிக்கப்பட்டான்; விஷ்ணுவே வருக' என்று வீரபத்திரர் அழைக்க, மகனை இழந்த விஷ்ணு இனித் தரிப்பரோவென்ன ஈசுவரனெதிரே தனியே சென்றார். யுத்தம் தொடங்கியது. 'சிங்கமுங் கற்கியும் பன்றியுஞ் செற்றவன், திரியநீர் செல்கெனச் சென்றமால் சினவெரிச், சங்குமுஞ் சக்ரமுந் தண்டமுங் கட்கமுஞ், சாபமும் பொடிபடத் தகனமே ககனமே' என்று கூறுகிறார் புலவர். அம்பிகையின் வேண்டுகோளுக்கு இரங்கிச் சிவபெருமான் மாண்ட தேவர்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தருளினார். இவ்வாறு கதை முடிகின்றது.

## தக்கயாகப்பரணியும் சோழர்களும்

தக்கயாகப்பரணியில் சோழர்களைப்பற்றிப் பல இடங்களில் கூத்தர் வருணித்துள்ளார்.

> "பொறைசூழ் வரையிற் புலியே றெழுதும்
> பொன்மே ருவரைப் பெருமான் மகளார்"
>
> (தக்க: 185).

சோழர்கள் மகாமேருவின் அடிமுதல் முடிவரை தங்கள் வீரப் புலிக்கொடியைப் பொறித்தார்கள் என்ற சரித்திர சம்பந்தமான செய்தி இவ்வடிகளால் விளங்கு

கின்றது. சிதம்பரம் கோவிலுக்குப் பசுக்கூட்டமும் யானைக் கூட்டமும் சோழன் தந்தானும்.

"வேம்பு கருநடர் வந்த வனமேனும்
விந்த வனமென வேவவும்"

(தக்க: 62).

என்றதனுல் சோழரின் வீரவென்றி புலப்படுகிறது.

சோழனின் ஐசுவரியத்தின் பெருமையைக் கண்டு சகியாது வெம்பித் திரியும் கன்னடராசனை சந்திர கௌரி வல்லபன் சோழன்மீது படையெடுத்துவர, அவனைக் கலியாணபுரத்தினின்று சோழன் எதிர்க்கச் சந்திரகௌரி வல்லபன் முதுகுகாட்டி ஓடி விந்தாடவி யிற் சென்று புகுந்தான். சோழன் அங்கே அவனைத் தொடர்ந்து சென்று அவ்வடவியை நெருப்பையிட்டுச் சுட்டான்.

சோழன் புரிந்த திருப்பணிகளைக் கூறுகிருர் புலவர்: 'கோயின்முன் எழ்நிலை கொண்டதொர் கோபுர, வாயில் வகுத்த பிரான்', 'இராச ராசச் சரஞ்சமைத்த தெய்வப் பெருமாள்', 'தில்லைனங் கட வுள்செறி கற்பக வல்லைனம்' அமைத்தவன் என்று அரசன் புரிந்த திருப்பணிகளை வருணித்துள்ளார்.

## பாண்டியர்கள்

பாண்டிய மண்டலம், 'செந்தமிழ் மண்டலம்' என்று சொல்லுகிருர் கூத்தர். சோழநாட்டை மட்டும் புகழ்ந்துவிடாது மற்ற நாடுகளையும் போற்றுவது அவருடைய பரந்த நோக்கத்தை வெளிக்காட்டுகின்றது. சைவமதத்தின்பால் புலவருக்கு இருந்த அன்பின் காரணத்தினுல் ஆளுடையபிள்ளை யாரைப் பாண்டியனும் அவன் தேவியும் வணங்கியதை, 'பெருமான் மகளாரும் வணங்க வணங்கினனே' என்று கூறுகிருர். 'உடம்பொரு பொன்மயமா,

ஒளிவிட்டு விளங்கினான் மீனவனே' (தக்க: 217) என்ற அடியினால் பாண்டியனின் உடம்பும் ஓர் கையும் பொன்னாக இருந்தன என்பதை அறிகின்றோம். பாண்டியனைத் 'தர்மராசன்' என்று புகழ்ந்துள்ளார்.

## இராமாயணம்

தக்கயாகப்பரணியில் இராமாயணத்திற் காணப் படும் சில விஷயங்களைப் புகுத்தியுள்ளார் கூத்தர்.

> "எறிப்ப எறிபடை நிசிசரன்சிரம் ஒருபதுங்கரம் இருபதுந்
> தறிப்ப ஒருசரம் விடுவ துங்கடல் சுடுவ துந்தனி சாபமே"
> (தக்க: 163).

சோதியை விடும் படையையுடைய இராவண னுடைய தலைபத்தும் கையிருபதும் ஒக்க ஒரு தொடை யில் ஒரேகால் அறும்படி ஓரம்பு விட்டதும் கடலைக் கொதிக்கச் செய்ததும் திருக்கையில் விளங்கிருக்கும் வில். (இது தேவியின் பஞ்சாயுதங்களில் ஒன்றாகிய வில்லைக் குறிப்பிட்டது).

இராவணன் திருமலையைப் பெயர்த்தெடுத்த விஷயத்தைக் கூறும்போது,

> "கூறக் குதந்த வாளிலரோ
> குத்தி நூக்க வேலிலரோ
> நீறக் குவதென் முப்புரத்தில்
> உள்ள வெள்ள நிருதரையே"
>
> "குழம்படியேம் புகவிழுந்து
> பொருப்படியிற் கொள்ளாமே
> பழம்படியே தசமுகனை
> விட்டார்தம் பாட்டறிவே.
> (தக்க: 225, 226).

இவ்வடிகளில் இராவணன் திருமலையைப் பெயர்த் தெடுக்க, அவனை ஸ்ரீபாதத்தில் திருவிரலால் ஊன்றி

யருள, அவன் சரீரம் நெரிந்து போக, அவன் நாவில் இனிய கானம் எழ, அப்பாட்டைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த மகாதேவர் அவனை விடுவித்த விஷயம் நயத்துடன் கூறப்பட்டுள்ளது.

இப்பரணியில் இராமரைப்பற்றி அதிகம் கூருது இராவணன் செயல்களை மிகக் கூறியுள்ளார்.

## உகாந்த காலம்

உகாந்த காலத்தைப்பற்றி மிகவும் அழகாக வருணித்துள்ளார் புலவர்.

உகாந்த காலத்தில் ஆதித்தர் உலகத்தைச் சுடுவார் என்று கூறுகிருர்: 'தொழின்மிக்க செக்கரெரி சுடரிட் டெரித்துலகு சுடுவார்கள்' (தக்க: 459), 'ஓலைக் கடனெருப்பி னுலகேழு முருகுங், காலக் கடை' (தக்க: 81) என்ற அடியினுல் உகாந்த காலத்தில் உலகமேழும் உருகிவிடும் என்பது தெரிகிறது. ஆரவாரத்தையுடைய கடலில் உறையும் வடவாமுகாக்கினி புறப்படும் என்றும் கூறுகிருர். உகாந்த காலத்தில் மகாசமுத்திரங்களின் நீர் பெருகி யாவற்றையும் அழிக்குமாம். உகாந்தப் பிரளயாக்கினி மேரு முதலிய பருவதங்களை மூழ்கும்படி செய்யுமாம். அது ஈசுவரனுடைய திருச்செஞ்சடையை ஒக்கும்.

## பூதகணங்கள்

இப்பரணியில் பூதகணங்களின் செயல்கள் மிக்க விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பூதகணங்கள் அகத்தியனைப் பொதியிற் குகையில் அடைத்தன என்று தெரிகிறது.

அவை அமுத கலசங்களைக் குடித்தது, 'திவ்ய பானம் வைத்தபொற், சாலெடுத்து வாய், மடுத்து வெவ்விடாய் தணித்துமே' (தக்க: 387)

என்ற அடியால் விளங்கும். அவை அவுணர்களைக் கொன்று அவர்களுடைய குருதிப் புதுப்புனல் கொப்புளித்தனவாம் (தக்க: 477). 'வெப்பூத முந்திரி சூலமிட் டுடன்கலந்து போதவே' என்ற அடியினால் பூதகணங்கள் தோள்களில் திரிசூலம் தாங்கும் என்பது தெரிகிறது. 'மடுத்தெடுத் தலைகொள் வாரிதிக ளேழுநக்கி' என்ற அடியினால் அவை கடலேழையும் நக்கும் என்பதை அறிகின்றோம். 'பூதங், கடைக்கால மெக்குன்ற முஞ்சுட் டுருக்கும்' (தக்க: 542) என்றதால் பூதகணங்கள் தங்கள் கண்களினாலே மலைகளை உருக்கும் என்பது தெரிகிறது. 'சங்கெடுத் துடைத்தயின் றன்றனைத் தனிப்பெருங், கொங் குடைச் சரோருகக் கிழங்ககழ்ந்து கொண்டுமே' (தக்க: 381) என்ற அடியால் பூதகணங்கள் சங்கநிதியையும் பதுமநிதியையும் அழிப்பன என்பது வெளிப்படையாகிறது. அவை சந்திரகாந்த மலையை உருக்கிக் குடிக்கும் தன்மை வாய்ந்தன என்றும் (தக்க: 357), சந்திரனை நிலத்தில் அரைக்கும் வன்மையுடையன என்றும் (தக்க: 487) கூறுகிறார் புலவர். அவை, 'அப்பு ளித்தயிர்க் கடலினுப்புக்கடல் அடையவே' (தக்க: 391) கொப்புளிக்குமாம். 'கடற்பெருந் திமிங்கி லங்கள் பற்றியே' (தக்க: 384) என்றதால் அவை திமிங்கிலங்களை உண்ணும் என்பதையும் அறிகின்றோம். 'பொங்கக் களிற்றீ ருரிப்போர்வை கொண்டும்' (தக்க: 551) என்ற அடி பூதகணங்கள் உதிரமறாத யானைத் தோலைத் தரிக்கும் என்று கூறுகிறது. அவைகள் நாகராசாக்களை மாலைகளாக அணிந்துகொள்ளுமாம்.

பூதகணங்கள் யாகப்பசுவைக் கொல்லுதலும் (தக்க: 505), வித்தியாதரர்களைக் கண்ணால் பொரித்தலும் (தக்க: 480), வருணனது சுறுக்களைத் தின்னுதலும் (தக்க: 491) தேவாசுர குருக்களை உருக்குதல், நாகங்களை உண்ணுதல் முதலிய செயல்களும் தக்கயாகப் பரணியில் கூறப்பட்டுள்ளன.

பூதகணங்களின் வருணனைகள் படிப்போருக்கு அச்சத்தையும் வியப்பையும் விளைவிப்பன என்பதில் ஐயமில்லை.

## யாமள நூல்

தக்கயாகப்பரணியில் தேவியைப்பற்றிக் கூறப்பட்டுள்ள பகுதியில் யாமளநூலைப்பற்றிச் சிறிது கூறியுள்ளார் கவிஞர்:

> "இக்கணங்கள் வந்துசூழும் யோகயா மளத்தினுள்
> மெய்க்கணங்க ளேவிரும்பு கோயில்யாம் விளம்புவாம்"
> (தக்க: 136).

இவ்வடிகளில், 'யாமள சாத்திரத்திற் சொல்லப்படுகின்ற பரமேசுவரியின் பதினெண் கணநாதராலும் விரும்பப்படுகின்ற கோயில் என்று கூறப்பட்டுள்ளதால், யாமளநூல் தேவியின் சிறப்பைக் கூறும் நூலென்பது தெரிகின்றது. யாமளசாத்திர மந்திர சாதகர் யாமள ஆகமத்தின்படி மந்திர புரச்சரணம் செய்வார்களாம்.

> "தலையரிந்துவிடு வாருயிர் விடார்தலைவிழன்
> நிலையநந்தமது மெய்யெரியி னின்றெரிவரே"
> (தக்க: 91).

பரமேசுவரியினுடைய யாமளசாத்திர மந்திர சாதகர் தம்முடைய தலையைத் தாமே அரிந்தெறிந்து தலையை விட்டு உடலைப் பற்றி நிற்பர். பரமேசுவரி முன்னே பிறருக்கு நிற்கவரிய நிலையிலே நின்று தம்முடைய சரீரங்களில் உண்டாகிய அக்கினியாலே நின்று எரிவாராம். யாமளத்தில் தேவிக்குரிய தூபத்திரவியங்கள் கூறப்பட்டிருப்பதில், 'புராதனரோ மப்புகையே', (தக்க: 112) தூபம் என்பதை அறிகின்றோம்.

## கூத்தரும் மகளிரும்

மகளிரைப்பற்றி மிகவும் விரிவாக வருணித்துள்ளார் கவிஞர். இமயவரை அரமகளிர் கடைதிறப்புப் பகுதியில் கூறப்பட்ட வருணனை மிகவும் அழகானது:

எழில் மிக்க பனிச்சையை யுடைய கருமுகில் போலவும் அகிற்புகையுடன் கூடிய கஸ்தூரியின் நாற்றம் நாறவும் வல்லி சாதிகளான இடைகள் வருந் தவும் தொய்யிலெழுதப்பட்ட தோள்கள் சமையவும் கண்கள் சுடரினுல் தங்கள் இனமென்று கருதிப் பெண் மான்கள் தொடரவும் திருக்கைலேயில் உமா பரமேசுவரி யுடன் சேவித்து வருகின்ற தெய்வப் பெண்கள்.

இம்மாதிரியான வருணனைகள் கடைதிறப்புப் பகுதியில் பல உள.

> **"உருதுங், காலக் கடையினுங் கோடியகட் கடைகளே."**
> **"புருஉப், பங்கத் தகிலமும் படுகோலேப் படுவதே."**
>
> (தக்க: 81, 82).

'மகளிரின் கண்கள் உலகமேழும் உருகும் உகாந்த காலத்து இறுதிப் பொழுதினும் கொடியவை. அவர் களின் புருவ முரிப்பிலே எல்லா உலகங்களும் படு கொலேப்படும்' என்று மகளிரின் எழிலின் தன்மையை வருணிக்கிருர்.

நெற்றியில் திலகமிட்ட மகளிர் வதனத்தைச் செந்தாமரையெனச் சந்திரன் கருதாது எனவும் அவனேடு பகைத்த இராகு கேதுக்கள் மகளிர் முகத் தைச் சந்திரனென்று நினேக்கா எனவும் கூறி இம்மகளிர் தாமே உலகத்தின் திலகம் என்று மிக்க நயத்துடன் கூறுகிருர் கூத்தர்.

## உவமைகள்

**பூ**தங்களே வருணிப்பதில் எடுத்தாண்ட உவமை களேக் கவனிப்போம்.

அக்கினிச் சுவாலேகள் மேனேக்கிப் பல கிளேகள் கொண்டு எழுந்தாற்போன்ற சிவந்த சுழன்ற தலேமயிர் விரியவும் எப்பொழுதும் சுழன்றுவரும் கண்களில் புகை பரந்துவர, எட்டுத் திக்குகளேயும் சுற்றிவர, ஒரு பேய் உலகத்தின் கடல்களேக் குடித்துப் பூமியைத் தின்று

யாவும் எரிந்துபோகும்படி சுடுர்படியான ஊழி முடிவின் வடவாமுகாக்கினிபோலக் கடுகிவர.

பூதங்களின் தலைமயிருக்குத் தழலும் விழிப் புகைக்கு ஊழித்தீயின் புகையும் கடலையும் அண்டத்தை யும் அழித்தலுக்கு வடவாமுகாக்கினியின் செயலும் உவமைகளாகும். நிகரானவைகளையே உவமைப் பொருள் களாகப் பொறுக்கியெடுத்துள்ளார் கவிஞர்.

மற்றோர் உவமையைக் கவனிப்போம்:

"தரங்க நிரைத்தன தரள நிரைத்தன
துரங்க மெனைப்பல கோடி தொகுத்தே."

(தக்க: 265).

முத்தைப்போன்ற வெண்மை நிறத்தையுடைய குதிரைகள் ஒன்றன்பின் ஒன்றாக நிரை நிரையாகக் குன்றாது வந்த காட்சி, கடலில் திரை அளவுபடாது அமையாது வரும் காட்சியைப்போல் இருந்ததாம்.

"மின்போல்வ ரவரோ யவர்மருங்கு லினிவே
றென்போல்வ தெனவெண்ணு வதெனில்லை யிணையே"

(தக்க: 84).

தேவியின் முற்றத்துப் பெண்கள் மின்போல மெல்லியராய் இருப்பதால் மின்னையொப்பர். அவர் இடைக்கு நிகர் வேறு நுண்ணிய பொருள் இல்லை. அதற்கு இணை அதுவேதான். இது பொதுநீங்கு உவமை அணியாகும்.

## கூத்தரும் தமிழபிமானமும்

ஒட்டக்கூத்தருக்குத் தமிழ் மொழியிடத்தில் இருந்த பேரன்பை அவர் இயற்றிய நூல்களினால் நாம் அறிகின்றோம். தமிழ்த்தெய்வம் என்று புகழப்படும் அகத்தியரிடம் இவர் எல்லையில்லாத பக்தி கொண்டவர். அகத்தியரைப்பற்றிய பல விஷயங்களை இவர் நூல்களி னால் நாம் அறியலாம்.

"தமிழ்க்குன்றின் வாழுஞ் சடாதாரி பேர்யாழ்
தழங்குந் திருக்கைத் தருக்கைத் தவிர்த்தே"

(தக்க: 539).

அகத்திய முனிவர் பேர்யாழ் வாசிப்பதில் வல்லவர் என்று புலவர் கூறுகிறார். பேர்யாழ் என்பது ஒரு வகைப் பெரிய யாழ்; அது இருபத்தொரு நரம்புகளையுடையது என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

"போதியில் வாழ்முனி புங்கவன்றிரு வாய்மலர்ந்த
புராணநூல்
விதியி னூல்வரு தும்பை மாலை விசும்பு தூர
மிலைச்சியே"

(தக்க: 624).

அகத்தியமுனிவர் அருளிச்செய்த பழைய நூலான அகத்தியத்தில் கூறியபடி வீரபத்திரதேவர் போர் செய்வதற்குத் தும்பைமாலை அணிந்தார் என்று கூறியுள்ளதால் தமிழ்மொழிக்கு அகத்தியமுனிவர் பரமாசாரியரென்பதை இந்நூலாசிரியர் விளக்கியிருப்பது போற்றத்தக்கது.

## ஈட்டியெழுபது

ஒட்டக்கூத்தர் இயற்றிய மற்றொரு நூல் ஈட்டியெழுபது. இந்நூலை அவர் தம் மரபினராய செங்குந்தர்கள் பொருட்டு எழுதியதாகத் தெரிகின்றது. இந்நூலைப்பற்றிய செய்தி ஸ்ரீ காஞ்சி நாகலிங்கமுனிவர் எழுதிய பிரபந்தத் திரட்டில் மிக்க எழிலுடன் காணப்படுகிறது. தாம் தோன்றிய செங்குந்தர் மரபைப்பற்றி ஒரு பிரபந்தமும் இயற்றாத ஒட்டக்கூத்தரை அம்மரபினர் அணுகித் தம் குலத்தைச் சிறப்பித்து ஒரு பிரபந்தம் இயற்றித் தரும்படி வேண்டினார்களாம். அவர்கள் வேண்டுகோளின்படி ஒட்டக்கூத்தர் ஓராயிரத்தெண்மர் சிரங்களை வேண்ட, அவ்வாறே அம்மரபினர் தந்ததாகவும், பிறகு கூத்தர் அச்சிரங்களைக் குவித்து ஒரு சிரச்

சிங்காதனம் அமைக்கும்படி செய்து அதன்மீது வீற்றிருந்து ஈட்டியெழுபது என்ற நூலைப் பாடினார் என்றும் சொல்லப்படுகிறது. இச்சம்பவம் உண்மை யானது என்று சொல்லுவதற்கு ஆதாரங்கள் இல்லை. ஆனால் செங்குந்த மரபினர் இக்கதையை அடிப்படை யாகக் கொண்டு ஈட்டியெழுபதை ஒரு சிறந்த பிரபந்த மாகப் பாவித்து வருகின்றார்கள். இந்நூல் இரண்டாம் இராசராசன் காலத்தில் (கி. பி. 1146) எழுதப் பட்டதாகத் தெரிகிறது.

கூத்தர் தம் மரபின் பெருமையைப்பற்றிக் கூறும் போது கச்சியப்ப சிவாசாரியாரால் மொழிபெயர்க்கப் பட்ட கந்தபுராணத்துள் காணப்பெறும் சிறப்புத் தம் மரபினர்க்கே சாலும் என்று உரைத்ததாக உரையாசிரியர் கச்சிப்பிரதாபனார் கூறுகிறார். இது உண்மையாயின் கச்சி யப்பர் கந்தபுராணம் இயற்றியது கூத்தருக்கு முற் பட்டதாகும். ஆனால் கந்தபுராணம் அவ்வளவு நீண்ட காலத்திற்கு முன் இயற்றப்பட்டது என்ற செய்தியை அறிஞர்கள் ஒப்புக்கொள்ளவில்லை.

ஈட்டியெழுபதுக்கு உரை எழுதியவர் கச்சிப் பிரதாபனார். அவர் இலக்கணச் சிதம்பரநாத முனிவரின் சீடராவார்.

## செங்குந்தர்

செங்குந்தர் என்ற சொல் குந்தத்திற்கு உரியவர் என்று பொருள்படும். குந்தம் என்றால் ஈட்டி. முதற்கண் எழுந்த ஈட்டியெழுபது என்ற சொல் இம்மரபினருக் குச் செங்குந்தர் என்னும் பெயர் உண்டானதற்குக் காரணத்தை விளக்கிக் கூறுகிறது. இம்மரபினருக்குக் கைக்கோளர் என்ற பெயர் ஏற்பட்டதற்கும் இதுவே காரணமாகும். இதனை, 'எய்தவர்க்குச் சிறைச்சோறு மீகுவர் கைக்கோள ராகிய செங்குந்தரே' என்ற அடியால் அறிகின்றோம்.

'நிதம்சந்தி சந்திசிவ சிந்தனை மறவாத ராவரிச் செங்குந்தரே' என்ற அடியினால் செங்குந்தர் சைவர்கள் என்பது தெரிகிறது. கைக்கோளர் என்றதில் கை என்பது ஒழுக்கம் எனவும் கோளர் என்பது கொண்டவர் எனவும் பொருள்படும். செங்குந்தர்கள், 'குரு பூசை சிவபூசை மறவாத நயவாளர்', 'தேவே விலகினும் நாவிலங் காதவர்'. செங்குந்தர்கள் வீரவாகு தேவர் மரபில் வந்தவர்கள்: 'தேவியுமை பாதச் சிலம்பில் வரு வீரியர்கள் சிறுதே ருருட்டி யருளே'. இவர்கள் சிறந்த வீரர்கள் என்பதை, 'சண்முகன்றன் சேனைபதி களும் சேனையும் ஆனவர் செங்குந்தரே' என்ற அடி கூறும். இவர்கள் 'சிங்கள மாதிய பல்தேயம் வென்ற வர்கள்; முருகக்கடவுள் துணையுடையவர்கள்; சோழர் களின் படைவீரர்கள்' என்று பலவாறு புகழ்ந்து கூறுகிறார் புலவர்.

## செங்குந்தர் சிறப்பு

ஒட்டக்கூத்தர் தமது முதற்பாட்டில் பின்வரு மாறு கூறுகிறார்:

> ''நாட்டிலுயர் செங்குந்த நாயகர்மீ திற்சிறந்த
> ஈட்டி யெழுப தினைப்பாடக்—கோட்டில்
> பருமா வரையதனிற் பாரதநூல் தீட்டும்
> கரிமா முகன்கழலே காப்பு.''

உலகினர் போற்றும் புகழ்பெற்ற செங்குந்தத் தலைவர்கள்மீது பல சிறப்புகள் அமைந்த ஈட்டி யெழுபது என்னும் பிரபந்தத்தை யான் பாட, படுத் துயர்ந்த மேருவில் தனது கொம்பினால் பாரத நூலை எழுதி வைத்த அழகிய யானைமுக விநாயகர் திருவடி கள் துணை என்று கூறுகிறார். இவ்வடிகளால் கூத்தர் தம் மரபினரிடமும் விநாயகர்மீதும் கொண்டுள்ள அன்பும் பக்தியும் விளங்குகின்றன.

ஈட்டியெழுபது எழுதியதன் காரணத்தைப் பின் வருமாறு கூறுகிறார் கவிஞர்:

"பூவார் புவனையிற் சோமன் றநும்பதி போனபின்
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
யாவாணர் செங்குந்த ராயிரத் தெண்டலை கோய்திரத்தப்
பாவாடை யிட்ட துலகமேல் லாம்புகழ் பாலித்ததே"
(ஈட்டி: 2).

## செங்குந்தரின் வீரம்

ஈட்டியெழுபது செங்குந்தர்களின் வீரச் செயல் களைப் புகழ்ந்து கூறுகின்றது.

'சினமுறு தாரகற் செறிசெங் குந்தமே' என்றதால் தாரகாசுரனைச் செங்குந்தம் (வேல்) என்ற படை சமர்க் களத்தில் நாசம் செய்தது என்பது தெரிகிறது. 'சினப் புலிக் கொடிதரச் செறிசெங் குந்தமே' என்ற அடியால் முருகக்கடவுள் சூரபதுமனைச் சங்கரித்த விஷயமும் பிறகு அவர் புலிக்கொடியை அருளச் செங்குந்தர் பெற்று வாழ்ந்தனர் என்பதும் தெரிகின்றன. 'தேவர் தஞ் சிறையினை மீட்டது, திருச்செங் குந்தமே' என்ற அடி, சூரபதுமனால் சிறையில் அடைக்கப்பட்டிருந்த தேவர்களை மகேந்திரபுரத்தின் சிறையிலிருந்து செங் குந்தம் விடுவித்த வீரத்தைப் புகழ்கின்றது.

"கோடியுமை தந்தவீட்டி, நலம்பெறும் இந்தப்பூங்
குந்தர் பரிசுபோல் நாட்டி லுண்டோ"
(ஈட்டி: 15).

பூங்கொடிபோன்ற உமாதேவியார் கொடுத்த கைவேலினது நன்மையைப் பெற்றவர்கள் செங்குந்தர் என்று இவ்வடிகள் கூறுகின்றன.

## செங்குந்தர் வாசஸ்தலம்

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவேரகம், திருவாவினன்குடி, குன்றதோறாடல், பழமுதிர்சோலை

ஆகிய இத்தலங்களில் செங்குந்தர்கள் வாழ்ந்துவந்தார்களென்று தெரிகிறது. இத்தலங்களில் முருகப்பெருமான் பல திருவிளையாடல்களைப் புரிந்துள்ளார் என்பதைப் பண்டைப் பிரபந்தங்களினால் நாம் அறிகின்றோம்.

## குந்தத்தின் சிறப்பு

'சாதிநா லுவப்புடன் றலைக்கொள் குந்தமே'; நான்கு வருணத்தாரும் களிப்புடன் தங்கள் சிரமீது வைத்துக்கொள்ளும் குந்தம் என்று கூறுகிறார் புலவர். இக்குந்தம் எம்மதத்திற்கும் பொதுவானதென்றும் யாவரும் இதனைப் பெறலாமென்றும் அறிவுறுத்துகிறார். இதனால் புலவருடைய சமயக் கோட்பாடு புலனாகிறது. வெற்றிபெற்ற குந்தம் என்பது, 'கோளாந்தகன் எண்டோளான் கைக்குந்தம் வாகைக் குந்தமே' என்ற அடியினால் விளங்கும். 'கற்றிடங் கொண்டவர் கவின்சொற் கொள்ளுமே, உற்றிடங் கொண்டபேர்க் குலகை நல்குமே' என்றதனால் குந்தத்தின் சிறப்பு நன்கு விளங்கும். குந்தத்தின் பெருமையை இன்னும் அழகாக வருணித்துள்ளார்:

''அம்பர்நாட் டமர்ந்த குந்தம் அயனரி யரன்மூன் றென்னும்
உம்பர்தா மறிய வேண்டும் உயர்ந்தமுத் தமிழினாலே
கும்பசம் பவனே நேர்ந்து கூறவே வேண்டு மல்லால்
இம்பர்யாம் கூற வேண்டும் எவர் மற்றுக் கூறுவாரே''.

'திருக்கைலாயத்தில் எழுந்த நவவீரர்கள் கையிலுள்ள குந்தத்தின் பெருமையை அயன், அரி, அரன் ஆகிய திரிமூர்த்திகள் அறியவேண்டும்; அன்றி அகத்தியனே ஆராய்ந்து மேலான இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழினாலும் சொல்லவேண்டும்; அன்றி இவ்வுலகில் அம்பலக்கூத்தனாகிய யான் கூறவேண்டும்; மற்றவரால் முடியாது' என்று அழகாகக் குந்தத்தைச் சிறப்பித்துள்ளார். 'யாம் கூறவேண்டும்'

என்றதால் கூத்தர் தம் மரபினரிடம் கொண்ட பற்றுதல் விளங்குகின்றது.

## ஈட்டியெழுபதில் காணும் சில சிறப்புகள்

குலோத்துங்கசோழன் தமிழின்பால் கொண்டுள்ள அன்பை வருணிக்கிறார் கூத்தர்.

"கோட்கவி கொண்டு மாக்கள்
கொடுந்தமிழ் கூற நீத்துத்
தாட்கவிப் புதிய வாட்டந்
தலைக்கடை துரந்து சாட
வாட்கவி கொண்ட மன்னன்."

புல்லிய கவிவாணர் முன் பழமொழிகளைப் பொருளாகக் கொண்டு சில பிரபந்தங்களைப் பாடி அரங்கேற்றம் கொடுந்தமிழை நீக்கி, போலிக் கவிகளைத் தலைவாயில்வரை துரத்தும், 'வாட்கவி' கொண்ட குலோத்துங்கனின் தமிழபிமானத்தை இவ்வடிகள் விளக்குகின்றன. கூத்தர் குலோத்துங்கனை மட்டுமன்றி மற்றச் சோழர்களான விக்கிரமன், இராசராசன் ஆகிய இவர்களையும் பலவாறு புகழ்ந்துள்ளார்.

## திருக்கழுக்குன்றம்

"வேதமலை வலம்வந் தீண்டுஞ்
சம்பாதிக் கழுதளிக்குஞ் சயக்குந்தம்"

(ஈட்டி: 22).

செங்குந்த வீரர்களைச் சிறப்பிக்கும்போது வேதகிரிநாதர் வாழும் திருக்கழுக்குன்றத்தை வலமாக வந்து நெருங்கும் சம்பு, ஆதி என்னும் கழுகுகளுக்குத் தினமும் அன்னத்தை அளிக்கும் செங்குந்தர் என்று புலவர் கூறுகிறார். இவ்விரு கழுகுகளுக்கும் அன்னம் அளித்திடும்காட்சியை இன்றைக்கும் அத்தலத்தில் காண்கின்றோம். செங்குந்தர்கள் அத்திவ்விய தலத்தில் வாழ்ந்து வந்தார்களென்பது தெரிகிறது. இவ்விரு கழுகுகளும் முறை தவறாமல் தினமும் வந்து தெய்வத்

திற்குப் படைத்த திவ்விய அமுதத்தை அருந்தும் சம்பவம் தெய்வத்தன்மையுடையது என்று கூறுவதில் குன்றிமணியளவும் ஐயமில்லை.

## வருணனைகள்

**நம்** காலத்துச் சோணாட்டில் விளங்கிய சிறு ஊர் களை மிகவும் போற்றும்படியான வகையில் கவி வருணித் துள்ளார். இயற்கை வளத்தையும் இயற்கைக் காட்சி களையும் படம்பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்:

**"மடல்வெண் டாழை முகமலர வாரிவாரித் திரைக்கரத்தில்**
**கடல்வெண் டரள மேயேறியு மோற்றியூரன்".**

என்ன அழகிய வருணனை! மடலையுடைய தாழை யின் வெண்மலரின் முகமானது மலரும்படி கடலானது அலைகளாகிய கைகளினால் வெள்ளிய முத்துக்களை வாரி வாரி வீசாநின்ற வளப்பம் பொருந்திய ஒற்றியூர்!

இனி, களந்தை என்ற ஊரின் வருணனையைப் பார்ப்போம்:

**"வளர்ந்த சாலி வரம்பினில் வால்வளைகள்**
**முத்தந்தரும் வளங்கூர் களந்தை."**

நெற்பயிர் வளர்ந்த வயலினது வரம்பில் வெள்ளிய சங்கினங்கள் முத்தத்தை யீனாநின்ற வளப்பம் மிகுந்த களந்தை என்ற ஊராகும்.

ஒரு போர்க்களத்தை வருணித்திருப்பதை நோக்கு வோம்:

**"பிறந்தபோன் பதின்மர் தந்தப் பெருமையாம் பேச மாட்டோம்**
**பறந்தன கழுதும் பாறும் பயிரவி காளியஞ்ச**
**மறந்தது மவுண ராட்ட மடங்கின மகிழ்ச்சி யால்வாய்**
**திறந்தன அலகை ஈட்டம் செய்யவாய்ச் சிறுவரோடே**
(ஈட்டி: 5).**

வீரவாகுதேவர் திருக்கரத்திலிருக்கும் ஈட்டியின் பெருமையை வருணிக்க இயலாது. அவர் புரிந்த சமர்

கண்டு கழுகின் கூட்டமும் பருந்தின் கூட்டமும் வட்ட மிட்டுப் பறந்தனவாம். துர்க்கையும் காளியும் கண்டு அஞ் சும்படியான சூரபதுமன் முதலிய அவுணர்களது கூத்தாட்டங்களும் கெட்டனவாம். அவ்வசுரர்களது பெருத்த பிணக்குவியலைக் கண்டு மகிழ்ந்து பேய்க்கணங் கள் தங்கள் சிவந்த வாயினையுடைய குழவிகளுடன் வாயைத் திறந்தனவாம். என்ன அழகிய வருணனை!

## எழுப்பெழுபது

ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படும் மற்றொரு நூல் எழுப்பெழுபது. இந்நூல் அவரால் பாடப்பெற்றதென்று தமிழ் அறிஞர்களாகிய திரு. இராகவையங்கார், ஸ்ரீ காஞ்சிநாகலிங்க முனிவர் இவர் கள் கூறுகிறார்கள். இது கூத்தரால் பாடப்பெற்றது என்று கூறுவதற்குத் தக்க ஆதாரங்கள் இல்லை.

செங்குந்தர்கள் தங்கள் சிரங்களை வெட்டித் தியா கம் செய்தபோது, சிரச்சிங்காதனத்தின் பொருட்டு வெட்டப்பட்ட உடல்கள் உயிர்பெற்று எழும்படி கூத்தர் நாமகளை வேண்டி இந்நூலை இயற்றினாராம். எழுபது செய்யுட்களைக் கொண்டது இந்நூல். பதின் மூன்று செய்யுட்கள் மாத்திரமே தற்காலத்தில் கிடைத் துள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் முருகக்கடவுளின் வீறு செவ்வையாகக் கூறப்பட்டிருக்கிறது. அறுபட்ட தலைகள் உறையூரினின்றும் பறந்து, ஆங்காங்கே வீழ்ந்துகிடந்த உடலோடு சேர்ந்து ஒட்டிக்கொண்டு உயிர்பெற்றனவாம். இச்சம்பவத்தை ஒரு காரணமாகக் கொண்டு கூத்தருக்கு ஒட்டக்கூத்தர் என்ற பெயர் வந்த தாகவும் கூறப்படுகிறது. இது கர்ணபரம்பரையாக வழங்கிவந்தகதை. (ஈட். எழு. கச்சிப்பிரதாபனார் உரை.)

இந்நூலில் ஒவ்வொரு பாட்டிலும் முன்னிரண்டடி களில் முருகனின் பேராற்றலை விளக்கிவிட்டு, பின் னிரண்டடிகளில் புலவர் தம் வேண்டுகோளைத் திருமக ளிடம் விண்ணப்பித்துக்கொள்ளுகிறார்.

"கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங்
கல்வியுணர் கவிவல் லோரை
நிலையாகப் புரப்பதுவும் அவர்நாவில்
வாழ்வதும் நீசமே யன்றோ"

என்று புலவர் வேண்டுதலை எழுப்பெழுபதில் காண்கின்றோம். 'தலையாவி கொடுத்திடுஞ் செங்குந்தர் உயிர்பெற் றிடவுந் தயைசெய் வாயே' என்றும், 'நங்குல முதலிதங்கள் தலைதனை யுடலிற் கூட்டித், தந்தருள் வாணித் தாயே' என்றும், 'எங்கள் கந்தனுக் கிளையர்க் காவி கண்டருள் வாணித் தாயே' என்றும் கலைமகளிடம் பலவாறு வேண்டுகிறார் கவிஞர்.

முருகனைப் பலவாறு புகழ்ந்துள்ளார்:'பலபல மதங்க டோறும் பற்பல வடிவமாகி, அலகிலா விளையாட் டென்று மாடிடு முருகவேள்', 'பரசிவ னிவனே என்று பன்முறை யேத்த நிற்கும் கந்தனே', 'தாமரைக் கிழவோன் றன்னைப் பெரும்பகல் சிறையில்வைத்த மீடுசேர் முருகன்', 'வள்ளியைத் தொண்டைநாட்டு வரைதனில் வதுவை செய்தவன்', 'மோனமா முனிவர் தேற முப்பொருள் கையாற் காட்டி, ஞானமாஞ் சத்திதன்னை நற்கரத் தமைத்தே யெங்கள்,கானமான்' என்றும் பலவாறு புகழ்ந் துள்ளார். நினைத்த வடிவினன், ஆதியந்தமிலான், வேதப் பொருளான், விச்சுவரூபன், பிதாமகன், தெய்வயானை மணாளன், வரையாது கொடுப்போன், ஞானசத்திதரன், தேவதேவன் என்று முருகனைக் குறிப்பிட்டுள்ளார்.

"விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர்
என்கவிக்கு விலையா கத்தான்
தலைதந்தார் என்க்கோட்டக் கூத்தனெனும்
பெயரினையும் தந்தார் தாரே."

இவ்வடிகளால் தமக்கு ஒட்டக்கூத்தர் என்ற பெயர் வந்த காரணத்தையும் இவர் புலப்படுத்துகிறார்.

# 14

## முடிவு

ஒட்டக்கூத்தரின் நூல்கள் சொற்சுவை பொருட் சுவை நிரம்பியவை. நாவிற்கு நயமும் செவிக்கு இன்பமும் மனத்திற்கு மகிழ்ச்சியும் அறிவிற்கு வளமும் பொழுது போக்கிற்கு உல்லாசமும் தரத்தக்க இனிய செந்தமிழ் நடையில் இவர் பாடல்களை இயற்றியுள்ளார். இவருடைய கற்பனைசக்தி மிகவும் அபூர்வமானது. வருணிப்பதில் இவருக்கு நிகரான புலவர்கள் சிலரே. பாலை வருணனையும் எழு பருவமகளிரின் வருணனையும் இவர் கவிவன்மைக்குச் சான்றுகளாகும். இவர் உபயோகித்துள்ள உவமைகள் மிகவும் ஆய்ந்து ஓய்ந்து எடுத்தாளப்பட்டவை. இராமாயணம், பாரதம், பரிபாடல், பெருங்கதை, தொல்காப்பியம் முதலிய பழைய நூல்களிலிருந்து இவர் மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார். இவருக்கு வயது முதிர்ந்தபோதிலும் ஆர்வமும் சிரத்தையும் குன்றாது நூல்களை இயற்றியுள்ளார். இவர் எழுதிய தக்கயாகப்பரணி மற்றப் பரணிகளைக்காட்டிலும் மிகச் சிறந்தது என்பது அறிஞர்களின் கருத்தாகும். தம் மரபின் பெருமையை உலகத்தாருக்குக் காட்ட இவர் ஈட்டியெழுபது என்ற பிரபந்தத்தை எழுதியது மிகவும் போற்றத்தக்கது.

சோணாட்டில் விளங்கிய கவிஞர்களில் மிகச் சிறந்த புலவர் ஒட்டக்கூத்தர் என்று இக்காலத்திலும் தமிழர் ஒப்புக்கொள்கிறார்கள். 'கவிச்சக்கரவர்த்தி' என்ற பட்டத்திற்கு இவர் எல்லா அம்சங்களிலும் தகுதியுள்ளவர் என்று கூறுவதில் சிறிதும் ஐயமில்லை.

"இறைவாழி தரைவாழி நிறைவாழி
இயல்வாழி இசைவாழியே
மறைவாழி மனுவாழி மதிவாழி
ரவிவாழி யாவும் வாழியே!"

முற்றும்